அருள்மாமணி வள்ளல்

உயர்திரு நா. ஆறுமுகம்பிள்ளை, A.M.N. திருமதி ஆறு. சீதைஅம்மாள்

# பவளவிழா மலர் 28.2.'85








அருள்மாமணி - வள்ளல்

உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை, A. M. N.

அருளரசி

திருமதி ஆறு. சீதை அம்மாள்

# பவளவிழா மலர்

28-2-85

# பவள விழா மலர்க்குழு

தலைவர் :

உயர்திரு சா. விசுவநாதன் (சாவி)

செயலாளர் :

திரு மு. அய்யாக்கண்ணு, M.A., B.T.
(அய்க்கண்)

உறுப்பினர்கள் :

திரு. கே. கே. ராஜன், M.A., M.Sc.,
திரு. பா. ரெங்கராஜன், M A.,
திரு. சி. ரவிக்குமார், M. A., M. Phil.,
திரு. மு. தமிழ்மணி,
திரு. என். ராஜமார்த்தாண்டன், III B. Sc.



# மொட்டு மலராகும் முன்னே . . .

ஏழைகளுக்கு உதவும் ' அருள்மாமணி ' யாய்

எளியவர்க்கும் கல்வி தந்த ' கலைவள்ள ' லாய்,

காகபுசுண்டரின் அருள்பெற்றுத் திருமந்திரத் தத்துவங்களுக்கு அரிய விளக்கம் தரும் ' அருட்பெரும் வள்ள ' லாய்த் திகழும்,

ஞானச்சித்தர் உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை A. M. N. — அருளரசி சீதை அம்மாள் அவர்களின் பவள விழாவை ஒட்டி இந்த மலர் இதழ் விரித்து மணம் பொங்கப் பூக்கிறது.

வள்ளலின் குணநலன்களையும், சிறப்புக்களையும் இம்மலரில் முழுமையாகக் காட்டிவிட வேண்டும் என்னும் எங்கள் பெரு முயற்சியில் தோல்வியடைந்திருப்பதை நாங்கள் முழுமையாக உணர்கிறோம்.

அத்தோல்வியே எங்களுக்கு மகிழ்ச்சியும் பெருமையும் தருகிறது.

முழு முதற் கடவுளின் முடியும் அடியும் காண முடியாமற் போனதுபோல், அருள்வள்ளலின் அளக்க முடியா அருங்குணங்களை நாங்கள் நிரல்படுத்த இயலாமல் சோர்ந்து நிற்கிறோம் ......

பவளவிழாத் தம்பதியர்க்குப் பல்லாண்டு கூறி வாழ்த்துச் செய்தி அனுப்பிய சமயத் தலைவர்களின் திருப்பாதங்களில் எங்கள் பணிவான நன்றியைக் காணிக்கையாக்குகின்றோம்.

வள்ளலைப் பற்றிய பாராட்டுரைகளை வழங்கியுள்ள மாண்புமிகு தமிழக அமைச்சர் அவர்களுக்கும் அறிஞர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அருள்மாமணி பற்றிய பாராட்டுக் கட்டுரைகளை அனுப்பியுள்ள மலேசிய மாண்புமிகு அமைச்சர் பெருமக்களுக்கும், சான்றோர்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறோம்.

வள்ளல் குறித்துத் தங்கள் கருத்துக்களை எழுதியுதவிய அறிஞர் பெருமக்களுக்கும், கவிஞர்களுக்கும், தொழிலதிபர்களுக்கும், பேராசிரியர் களுக்கும், அலுவலர்களுக்கும், முன்னாள் மாணக்கர்களுக்கும் எங்கள் மனமுவந்த நன்றி உரித்தாகுக.

மலேசிய மாத இதழான ' சமநீதி ' யில் வெளிவந்த 'அருட்பெரும் வள்ளல்' அவர்களின் கட்டுரைக் கருத்துக்களை இம்மலரில் வெளியிட அனுமதி தந்த ஆசிரியருக்கு எமது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

பவள விழா மலர் அமைப்பதற்கான அறிவுரைகளைத் தந்ததோடு, மலேசியா வாழ் பெருமக்களின் வாழ்த்துச் செய்திகளையும், கட்டுரைகளையும் வாங்கியனுப்பி உதவிய 'சேர்மன்' உயர்திரு. நா. ஆறு, நாகராசன் அவர்களுக்கு எமது பணிவான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

"மலர் வேலையைக் குறித்த நாளுக்குள் முடித்து விடுவீர்களா, ஸார்? எனக்குச் சந்தேகமாயிருக்கிறது..." என்று அடிக்கடி கேட்டுப் பயமுறுத்தி, குறித்தபடியே மலரை வெளிவரச் செய்த கல்லூரிச் செயலர் உயர்திரு. நா. ஆறு. தங்கவேலு, B. Com., அவர்களுக்கு எமது பணிவான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மலருக்கான அட்டைப்படத்தை, எங்களுக்குத் திருப்தியளிக்கும் வரை அலுக்காமல் திருத்தித் திருத்தி அமைத்துத் தந்த மதுரை ஓவியர் திரு. கேப்ரியல் அவர்களுக்கு எமது நன்றி.

குறுகிய காலத்தில் மலரைச் சிறப்பாக அச்சடித்துத் தந்த கணேஷ் அச்சகத்தாருக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். அச்சக மேலாளர் திரு. மீ. இராஜேந்திரன், முதனிலைத் தொழிலர் திரு. க. கடம்பவனம், மற்ற உண்மையான ஊழியர்கள் ஆகியோரின் ஒட்டு மொத்தமான ராட்சஸ வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியாமல், டிரெடில், ஆஃப்செட் இயந்திரங்களே தடுமாறின என்பதைக் குறிப்பிடாமல் இருக்கமுடியவில்லை.

எங்களுடைய இதயமார்ந்த படைப்பை உங்கள் மலர்க்கரங்களில் தந்துள்ளோம்.

நன்றி : வணக்கம்,

— மலர்க்குழுவினர்





பொன்மன வள்ளல் கண்ட
பூமாயி அம்மன் கோயில்.



அருள் ஞானநிலை கண்ட அருஞ்சித்தர்
ஆன்மீகச் சிந்தனையில் அமர்ந்த காட்சி



இளமைப்பருவத்து 'அருள்மாமணி' யும்
இன்முக நாயகி 'அருள் அரசியும்'



திருவருள் செல்வரும், சிதை அரசியாரும் மூத்த திருமகனுர் திரு. நாகராஜன் அவர்களுடன்
இளமைக் காலத்தில் அமைந்த ஒளிக்கோலக் காட்சி.









சமய அருளாளரின்
சன்னதியில் . . .





# அறப்பணி செய்யும் அறவோர் வாழ்க!

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் காஞ்சிபுரம் 631 502.
ஸ்ரீ மடம் சமஸ்தானம்

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்ற பழமொழிக்கு ஏற்றவாறு அரிதான மனிதப் பிறவியை எடுத்தவர்கள் நல்ல அறப்பணிகளை செய்து நல்லவர்களாக வாழவேண்டும். உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை பல கோயில் அறப்பணிகளையும், கல்வி அறப்பணிகளையும் செய்து வந்ததைக்கேட்டு மிகுந்து சந்தோஷிக்கிறோம். அன்னாரின் பவள விழா நல்லமுறையில் நடைபெற்று, இறைவன் அருளால் சதாபிஷேகமும் அனைவரும் காண ஆசீர்வதிக்கின்றோம்.

நாராயணஸ்மிருதி :



# பொய்யாமொழிப் புகழ் வள்ளலே வாழ்க!

SKANDASRAMAM GURUKULAM
CHARITIES TRUST

SKANDAGIRI, UDAYAPATTI,
SALEM - 636 014.

*ஸ்ரீ ஸ்ரீ ஸத் குரு சாந்தானந்த சுவாமிகள் அவர்களுடைய விசேஷமான ஆசீர்வாதத்துடன் கூடிய அருளாசிச் செய்திகள் :*

தமிழகத்தின் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் திருப்புத்தூரையே மக்கள் போற்றிப் புகழும்படி செய்துகொண்டு இருந்துவரும் வள்ளல் அருள்மாமணி.யென தமிழகத்தின் மேன்மக்களான நன்மக்களால் போற்றிவரும் பெருமதிப்பிற்குரியவரான ஸ்ரீமான் நா. ஆறுமுகம் பிள்ளை *A. M. N.* - திருமதி. சீதையம்மையார் அவர்களையும் ஜகஜ் ஜனனியான ஸ்ரீ மாதா புவனேஸ்வரி தேவியின் தியானத்துடன் ஸ்ரீ ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் விசேஷமான ஆசீர்வாதத்துடன் அனுக்கிரகித்துள்ளதாவது :

தமிழகத்தை உலகம் உள்ளவரை போற்றும்படி செய்துவைத்துள்ள மஹா புருஷரான திருவள்ளுவரின் "தோன்றிற் புகழோடு தோன்றுக" எனப்படும் பொய்யாமொழியை மெய்ப்பித்துவிட்டவரான, நல்லறிவும், நல்லொழுக்கமும், நல்ல மனமும் நிறைந்த கொடைவள்ளல் என மேன்மக்களான நன் மக்களால் போற்றப்பட்டு வருகிற உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் அன்பையும், பண்பையும் தமக்கு அணிகலனுக்கிக் கொண்டு தமிழனின் பெருமையை சிங்கப்பூர், மலேயா நாடு முழுவதும் தெரியும்படி செய்து கொண்டு தமிழகத்தின் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் உள்ள திருப்புத்தூரையும் தமது தொண்டினால் சிறப்புறச் செய்துகொண்டு இருந்து வருகிற மஹா-ள-ா-ஸ்ரீ நா. ஆறுமுகம் பிள்ளை *A. M. N.* திருமதி சீதையம்மையார் அவர்களுடைய பவள விழா சிறப்புடன் நடைபெற்று பெருமதிப்பிற்குரிய ஸ்ரீமானான நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் தமது குடும்பத்தாருடனும், பந்துக்கள், நண்பர்களுடனும் நீடூழி காலம் நீண்ட ஆயுள் ஆரோக்கியத்துடன் இருந்துவர வேண்டுமென ஸ்ரீஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் வள்ளல் அருள்மாமணி உயர்திரு. நா, ஆறுமுகம் பிள்ளை அவர்களை ஆசீர்வதித்து அனுக்கிரகிப்பதுடன் பவள விழா மலர் குழுவினர் அனைவரையும் ஆசீர்வதித்து பெருமதிப்பிற்குரிய ஸ்ரீமானான கொடைவள்ளல் நா. ஆறுமுகம் பிள்ளை *A.M.N.* - திருமதி சீதையம்மாள் அவர்களின் பவள விழா மலர் வெகு சிறப்புடன் இருந்துவர வேண்டுமெனவும் ஸ்ரீ ஸ்ரீ ஸத் குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்களுடைய விசேஷமான அருளாசிச் செய்திகளையெல்லாம் பணிவன்புடன் தெரிவிக்கலானோம்.



# தெய்வத் திருப்பணியாளர் சீருடன் வாழ்கவே!

ஜெகத்குரு
ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ
*திருச்சி மஹா சுவாமிகள்*

" ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரம
மஹாசமஸ்தானம் "
கெஞ்சேனஹள்ளி
பெங்களூர் - 560 039,

அன்பு நிறையப் பெற்ற சான்ஞேர், அருள்மாமணி ஸ்ரீ ஆறுமுகம்பிள்ளை அவர்களின் பவளவிழா எதிர்வரும் 28—2—85ல் நிகழவிருக்கின்ற நற்செய்தியினை ஜெகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹா ஸ்வாமிகள் அவர்கள் சமூகத்தில் தெரிவித்தோம். அதனைச் செவிமடுத்த ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்கள் ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை — சீதையம்மாள் தம்பதியினருக்கு மகிழ்ச்சியுடன் பூரண நல் ஆசியினை அருளியிருக்கின்ருர்கள்.

ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை அவர்கள் ஸ்ரீலஸ்ரீ மஹா ஸ்வாமிகளிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவர்கள் என்றும், போற்றுதற்குரிய தெய்வத் திருப்பணியாளர் என்றும் தாய் நாட்டிலும் பினங்கு போன்ற கடல் கடந்த நாடுகளிலும் கல்விக்கும், பக்திக்கும் சிறந்த ஆலயங்களை நிறுவியுள்ளார்கள் என்றும், அன்ஞரின் அன்பு கலந்த சேவையை மலேசிய நாட்டில் நேரில் கண்டறிந்தோம் என்றும், அவர்கள் புகழ் தமிழ்போல் தழைத்து நிற்கும் என்றும் வெகுவாகப் பாராட்டினுர்கள்.

ஸ்ரீ ஆறுமுகம்பிள்ளையின் பவள விழாவும், அதனை நினைவு கூரும்பொருட்டு மலர் வெளியீடும் சிறப்புடன் நடைபெற அருள் புரியவேண்டி ஸ்ரீ அம்பிகையின் திருவடிகளைச் சிந்தித்து இத்துடன் அக்ஷதை பிரசாதம் அனுப்பியுள்ளோம்.



# மக்களிற் சிறந்த வள்ளலே வாழ்க!

*திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்*
*26-ஆவது குருமகாசந்நிதானம்*
*ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த*
*பரமாசாரிய சுவாமிகள்*

*தருமபுரம்*
*மயிலாடுதுறை-609 001*

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே" என்பது தொல்காப்பிய நூற்பா. மனித சட்டை தாங்கி வந்துள்ள காரணத்தினாலேயே ஒருவனை உயர்திணையாகக் கொள்ள முடியாது என்பதும் மனிதன் என்னும் சுட்டுக்குரியவனாக அவனிடம் மனப்பண்புகள் விளங்கி இருந்தால் மட்டுமே உயர்திணை என்று கொள்ள முடியும் என்பதும் அந்நூற்பா தரும் விளக்கமாகும். இந்நிலையில் இன்று பலரும் மனிதனாகத் தோற்றம் தருகின்றார்களே தவிர மனிதன் எனும் சுட்டுக்குரியவராதல் இல்லை. இந்நிலை வருந்தத் தக்கது. ஆனாலும் அன்பர் திரு. நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களைப் போன்றோர் தம் வள்ளன்மையாலும் பல்வேறு செயல்முறைகளாலும் தனித்து நிற்கின்றனர். இது பாராட்டுக்குரியது.

இவரின் பவள விழாச் சிறப்புடன் கொண்டாட இருப்பது மகிழ்ச்சிக்குரியது. பவளவிழாச் செல்வர்கள் பல்லாண்டுகள் நலமுடன் வாழவும், விழாச் சிறப்புடன் நிகழவும், விழாவை ஒட்டி வெளியிடப்பெறும் மலர் கருத்து வளங்களைத் தாங்கி வெளிவந்து சிறக்கவும் விழாவில் பங்குபற்றும் அன்பர்கள் நலம் பல பெற்று நீடு இனிது வாழவும் எல்லாம்வல்ல ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.



# சான்ருண்மை மிக்க தக்கார் வாழ்க!

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித்தம்பிரான்
சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீ காசிமடம்

திருப்பனந்தாள் - 612 504
(தஞ்சை மாவட்டம்)

## வாழ்த்துரை

அன்பு, நாண், ஒப்புரவு, வாய்மை, கண்ணோட்ட மெனும் ஐந்து தூண்களால் தாங்கப்பெறும் சான்ருண்மை மிக்க அன்பர் வள்ளல் அருள்மாமணி திரு நா.ஆறுமுகம்பிள்ளை,பவள விழாக்காண்பதும், விழா தொடர்பாகச் சிறப்பு மலரொன்று வெளியிடப் பெறுவதும் அறிந்து மகிழ்கின்ருேம்.

'ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தலைத்' தலையாய அறம் என்றது பாரதி பாடல். அத்தலை யாய அறத்துடன் பிற அறச்செயல்களையும் ஆற்றி வருகின்ற அன்பர் திரு. ஆறுமுகம் பிள்ளை தனது துணைவியுடன் நெஞ்சொன்றி இல்லறம் ஆற்றிப் பல உயரிய நலன்களை எய்தியுள்ளமை சிறப்புடைய தாகும்.

பவள விழாச் சிறப்புற நிகழ்ந்திடவும், விழா மலர் அன்பரின் அரிய பண்பு நலன்களைப் பகர்வதாக அமைந்திடவும், அன்பர் நீடினிய நல்வாழ்வு வாழ்ந்திடவும் செந்திற் கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்ருேம்.

சுபம்.

# இல்லோர் செம்மல் இன்புற்று வாழ்க!

தவத்திரு
குன்றக்குடி அடிகளார்

குன்றக்குடி - 623 206
இராமநாதபுரம் மாவட்டம்

## வாழ்த்து

தென்ற லொடுதேன் மணம்உலாப் போதரும்
திருவால வாய்நிகர் திருப்புத் தூரில்
வரலாற் றுப்புகழ் வாய்ந்தவே ளாண்குடித்
தோன்றி மூத்தநம் மணிஅருள் மாமணி
அறநெறிச் சான்றோர் ஆறுமுகம் பிள்ளை
நற்றவ நங்கை சிதையம் மாளொடும்
நிகழ்த்திய மணியற மாண்பு செப்புமோ!
மங்கல மணமாட் சியினில் உதித்து
நன்கல மெனத்திகழ் கின்றநன் மணிகளாம்
நன்மக் கள்திறம் செப்புமோ! எளியராய்த்
தொடங்கிய வாழ்க்கை அறிவ றிந்த
ஆள்வினை யால்ஆன்ற பொருள்குவித் திட்ட
திறத்தினைச் செப்புமோ! கவினுறு பலகலை
பயிற்றும்கல் லூரி கண்ட பாங்குடைச்
சிறப்பினைச் செப்புமோ! எந்தை ஈசன்
பொருளுடைப் புகழில் நெஞ்சம் தோய்ந்து
கற்றோர் வியப்ப, கேட்போர் காமுற
அருள் ததும்பிட நிகழ்த்தி டும்உரைதான்
நின்னை அருள்மா மணியாக் கியது!
திருப்புத்தூர்ச் செல்வ! இல்லோர் செம்மல்!
பவள விழாக்கண் டிடும்பண் பாள!
நின்புகழ் வளர்க! நீவிர்வாழ்ந் திடுக!
இனிதுவாழ்ந் திடுக! இன்புற்று வாழ்கவே!



# கல்விக்கொடையாளர் பல்லாண்டு வாழ்க!

ஸ்ரீலஸ்ரீ அருணகிரி நாத ஸ்ரீ ஞானசம்பந்த
தேசிக பரமாச்சாரிய ஸ்வாமிகள்

292-ம் குரு மகா சந்நிதானம்
ஆதீன கர்த்தர், மதுரை ஆதீனம்

70, தெற்கு ஆவணிமூல வீதி
மதுரை - 625 001

## பவள விழா வாழ்த்துக்கள்

தமிழகத்தில் சீரும்சிறப்புமாக வாழும் சீலர், தமிழர் களுக்கு வளமான கல்விக்கு அரும்பாடுபட்டு வருகின்ற உயர்திரு. ஆறுமுகம் பிள்ளை அவர்களுக்கும், அவர்களது அருமைத் துணைவியார் சீதையம்மாள் அவர்களுக்கும் பவள விழா எடுக்கின்ற பாங்கினை வார்த்தைகளால் எடுத்துரைக்க முடியாது. நாகப்பா-மருதப்பா உயர்நிலைப் பள்ளியில் 1960-61, 1961-62, 1962-63, 1863-64ஆம் ஆண்டுகளில் மாணவப் பருவத்தை மன மகிழ்வுடனும், நிறைவுடனும் கழித்த இனிமை நினைவுகள் தொடர்கின்றன. கல்விச்சாலைகளும், அவர்களால் தோன்றிய நிறுவனங்களும் பாரம்பரிய மிக்க அறிவு நிலையங்களாக இன்றும் அப் பெருமகன் பெயரினைப் பறைசாற்றும். இன்றும் திகழ்வதை — இனியும் அவை திகழப்போவதை, அவர்களின் பெயரும், புகழும் சான்று பகரட்டும். கல்விக்கொடை மென்மேலும் அதனுல் விளக்கம் பெறட்டும். எல்லாம் வல்ல இறையருள் பவள விழாக் காணுகின்ற முதுபெரும் தம்பதிகளுக்கு நீடித்த ஆயுளை நல்கட்டும். விழா நிறைவுக்கு நல்வாழ்த்துக்கள். மலருக்கும் நல்லாசிகள் !



# பண்புநிறை குணசீலர் பல்லாண்டு வாழ்கவே !

திருத்தவத்திரு. பன்றிமலை சுவாமிகள் 5, வில்லேஜ் ரோடு,
'ஓம் நம சிவாய' நுங்கம்பாக்கம், சென்னை-34.

வள்ளல் என்போர் வரையாது கொடுப்பவர்.. அவர் பெற்ற செல்வங்களைப் பல நல்ல காரியங்களுக்கு வழங்கி இம்மைக்கும் மறுமைக்கும் அழியாத புகழைத் தேடி ஓர் உயர்ந்த நிலையில் நிற்பவர். அந்த வரிசையிலே வந்த வள்ளல் அருள்மாமணி, கல்லூரி கண்ட கலை வள்ளல் உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை, அவர்களின் பவளவிழா (28—2—85) காணும் இந்நாளில் அவர் கல்வி வளர்ப்பதில் ஆர்வம் உள்ளவராகவும், தாம் ஈன்ற பெரும் செல்வத்தை வாரி வழங்கும் கொடை வள்ளலாகவும், பரோபகாரியாகவும் வாழ்ந்து வருகின்ற அவரைத் தமிழகம் மட்டுமல்லாமல் பிற மாநிலங்களும் மற்றும் அயல் நாடுகளும் அறிந்து வைத்துக் கொண்டிருக்கிறதென்றால் அது மிகையாகாது.

இவ்வளவு பெருமை வாய்ந்த அருள்மாமணி அவர்களிடத்தில் யாம் கண்ட குணச் சிறப்பையும், அவருடன் பேசிப் பழகிய இனிய அனுபவங்களையும் இங்கே குறிப்பிட விரும்புகிறோம்.

யாம் மலேயா நாட்டில் சுற்றுப் பயணம் மேற்கொண்டபோது அன்னார் எமது வருகையைக் கேள்விப்பட்டு, எம்மைச்சந்தித்து, யாம் மகிழ்ச்சியடையும் வகையில் பணிவிடை புரிந்து, அன்புடன் உபசரித்து, விருந்து படைத்து, இனிய வார்த்தைகளைப் பேசி விடை பெற்றுக் கொண்ட அந்த குணசீலரின் பண்புகள் இன்றும் எம்மனதில் நீங்காத இனிய நினைவுகளாகவே காட்சியளிக்கின்றன. மேலும் அங்கு யாம் பல கல்விக்கூடங்களுக்கும் ஆன்மீக காப்பகங்களுக்கும், தர்ம சிரோன்மணிகளும் சான்றோர்களும் கூடும் மன்றங்களுக்கும் செல்லும் வாய்ப்பு ஏற்பட்ட போதெல்லாம் யாம் வியக்கத்தக்க வகையில் வள்ளல் நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களின் பெயர் அறிமுகமாயிருந்ததைக் காணும் நேரத்தில் என் மனம் அன்னாருடைய தர்ம நோக்கங்களின் உயர்வையும், நற்குணங்களின் பெருமையையும் எண்ணி மகிழ்ந்தது.

பிறந்த மண்ணில் மட்டுமின்றி பிற நாடுகளிலும் அவருடைய பேரும் புகழும் மென்மேலும் பரவி, இறைவனின் அருளைப் பெற்றுத் தம்பதிகள் பல ஆண்டுக் காலம் நீடூழி வாழ வேண்டுமென ஆசி கூறுகிறோம்.



# அறச்செம்மல் வாழ்க!

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

107, சிங்கணச்செட்டி தெரு,
சிந்தாதிரிப்பேட்டை
சென்னை - 600 002

## பவள விழா வாழ்த்து

( நேரிசை வெண்பா )

அருமை அறச்செம்மல் ஆறுமுகம் பிள்ளை
அருளார் சீதையம்மை ஆச்சி — பெருமை
பவளவிழாக் கொண்டினிது பல்லாண்டு வாழ்க
தவளமலை அண்ணலருள் சார்ந்து.

அன்பன்
கிருபானந்தவாரி



# LONG LIVE THE LARGE-HEARTRD SOUL

## SHUDDHANANDA YOGA SAMAJAM (SAYS)

SOLAPURAM - SIVAGANGA

President : Kaviyogi Maharishi Dr. SHUDDHANANDA BHARATI

**LARGE-HEARTED SOUL - N. ARUMUGAM PILLAI**

He lives for cosmic service sure.
He earns by green labour
His heart is large ; his help is sure
Art lives by his favour

Rubber milk accords him riches
He spends it for culture
His large heart daily nurtures
Academic venture
He likes to do good day and night
Praying God in his heart
Arumugam does what is right
To do good is his art

A gentleman of rising fame
Helps all with joy ; Long live His name

He labours now for world uplift
His heart is love ; His hand is gift ...
Long live Arumugam
By the Divine grace ...
Amen !

1

ஆறுமுகம் பிள்ளை ! நாளும்
அறம் வளர்த்த பிள்ளை
அன்புடைய வேளாளர்
தாளாளர் போற்றும்
வீறுடைய சீருடைய
பேறுடைய செல்வர்
வினைத்திட்பம் மனத்திட்பம்
விசைத்திட்ப வீரர்
ஏறுமயில் ஏறி விளை
யாடிவரும் எம்மான்
எழிலுடைய பேருடையார்
பொழிலுடைய செல்வர்
மாறுபடும் வினைவரினும்
மனங்கலங்கா வள்ளல்
மாண்புடைய பவழ விழா
காண்பது நல் இன்பம்

2

சிரஞ்சீவி யாய்த் திகழ்க
சீதை மணவாளன்
சீர்சிறந்த செந்தமிழன்
சீர்த்தவளர் வள்வல்
பரந்துலங்கும் இல்லறத்தின்
பண்பாட்டு நண்பன்
பாருயிர்கள் ஓர்குலமாய்ப்
பார்க்கும் சமயோகி
மரஞ்செழிக்க ரப்பர்ப்பால்
மல்குமலை நாட்டில்
வளஞ்செழிக்க விளங்குகின்ற
திருப்புத்தூர் வள்ளல்
பரஞ்செழிக்கப் பார்வாழ்வின்
பயன்செழித்த உரவோன்
பவழ விழா பொலிக நலந்
திகழ வுலகெல்லாம்
பார்புகழப் பல்லாண்டு
பல்லாண்டு வாழ்க !

# நலம் சிறக்க ஆறுமுகனுர் நாளும் வாழ்க!

தவத்திரு. வித்துவான்
சாந்தலிங்க இராமசாமியடிகள்

பேரூர்
கோயமுத்தூர் - 641 010

**சாந்தலிங்கப் பெருமான் இன்னருள் பெறுக**

நன்பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி
நற்கனகக் கிழியளித்த நயத்தைப்பாடும்
தென்னுட்டுத் திருப்புத்தூர் சமயவாழ்வில்
செழித்தோங்கத் தன்பொருளைச் செலவுசெய்து
நன்மக்க ளுருவாகக் கல்விப்பண்பு
நலஞ்சிறக்க ஆறுமுகப் பிள்ளை நாளும்
அன்புடன்செய் பணிவளர்க எழுபதாண்டின்
அதன்மேலும் பல்லாண்டு வாழ்கவாழ்க.
மாணிக்க வடிவாகும் ஆடல்வல்லான்
மகிழ்ந்தேற்கும் திருமுழுக்குஆதிரை நன்னுளில்
காணிக்கை எனப்பொருள்கள் மிகவும் நல்கிக்
கனிவாய்உத் தரகோச மங்கைதன்னில்
பேணிப் போற்றிடும் ஆறுமுகப்பேர் சான்ருேர்
பெற்றிமிகு சீதையம்மாள் பணிகள்வாழ்க.
ஆணிப் பொன்னம் பலமேனி யென்றும்
அணிவிழா சிறந்தோங்க வாழ்த்துகின்ருேம்.



# கல்லூரி கண்ட கலைவள்ளல் வாழ்கவே!

தி. செ. முருகதாச சுவாமிகள்
தலைவர் :
திருப்புகழ்த் தண்டாயுதபாணி சுவாமி கோயில்
கௌமார மடாலயம்

திருவாமாத்தூர்
விழுப்புரம் வழி

## பவள விழா வாழ்த்து

வெண்பா

நண்ணுபகழ் பொன்முத்து ராமலிங்கர் மாவட்டம்
அண்ணுதிருப் புத்தூர் அதில்வாழ்வார் — திண்ணமுறும்
மெய்யன்பின் சீலர் வியன்கொளருள் மாமணியார்
நைவறுசீர் ஆறுமுக னார்

திருப்பற்றும் செல்வர், திருப்புத்தூர் வாழ்வார்
விருப்பத்தோ டன்புரையே விள்வார் — குருப்பக்தி
மன்னும் அருள்மா மணிஇன்று பெற்றார்
மின்னும் பவள விழா

கல்லூரி கண்ட கலைவள்ளல் அன்புடனே
நல்லூண் அளிக்கும் நசையினர் — சொல்லூகம்
துன்னுபுகழ்ச் சிதையெனும் தூய மனையுடனே
மன்னுமில்ல றம் பேணு வார்

அருள்மா மணியென்னும் ஆறுமுகம் பிள்ளை
தெருள்வாய்ந்த தெய்வபக்திச் சீலர் — பெருமாண்பால்
ஆன்மிக வாழ்வில் அவிரும் குணமிக்கார்
தேன்போலும் இன்பேச் சினர்

வெள்ளிவிழா பொன்விழா மின்னும் மணிவிழா
தெள்ளியோர் போற்றவுற்ற சீர்கொளிவர் — நள்ளும்
பவளவிழா இன்றுபெற்றார் பல்லாண்டு வாழ்க!
குவலயத்தோர் கூறுபுகழ் கொண்டு

இனிய மொழியிகை இன்புடனே நல்லோர்
தனிமகிழ் விருந்தூட்டும் நட்பு — தனிலுற்ற
ஆறுமுகம் பிள்ளை அருள்மா மணிவள்ளல்
மீறுமின்பா வாழ்கபுவி மீது

# பவள விழா இன்று பெற்றூர் பல்லாண்டு வாழ்க !

ஂந்தசாமி ஸ்வாமிகள்
ஃசான்ய மடாலயம்

திருவண்ணுமலை, R. S.,
( வ. ஆ. மாவட்டம் )

திரு. அண்ணுமலையாரின் அருள் நினைந்து
எழுதுவது

திரு. நா. ஆறுமுகம் பிள்ளை சீதை அம்மாள் தம்பதிகளிருவருக்கும் பவள விழா நடைபெறும் செய்தியறிந்து மிக மகிழ்ச்சியடைந்தோம்.

பவள விழா சிறப்பாய் நடைபெறவும் பவள விழாக் காணும் திரு. தம்பதிகளிருவரும் எல்லா நலன்களும் பெற்றுப் பல்லாண்டு காலம் இனிது வாழவும் சாஸ்திரத்தில் சொல்லியபடி எல்லா விழாக்களும் காணவும் வாழ்த்துகின்றோம்.



# வாழ்வாங்கு வாழும் வள்ளல்மணி வாழ்கவே

ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்
சந்நிதி வீதி
திருப்பாதிரிப்புலியூர்
கடலூர் - 2

## திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூராதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலய ஏழாம் குருநாதர்

## ஸ்ரீலஸ்ரீ. சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அருளிய

## வாழ்த்துரை

வையத்து வாழ்வாங்கு வாழ்தல் யாவருக்குங் கைகூடு வதன்று என்பதால்தான் அங்ஙனம் அருகி வாழ்பவரைத் தெய்வ மெனப் போற்றும் உலகு எனத் திருவள்ளுவர் அருளினர்.

இளம் பருவமுதலாகவே அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மைகளைக் கடைப்பிடிப்போர், அவை தூணுகித் தாங்கச் சிறந்தோங்கிக் காட்சியளிக்கக் கூடும் என்பதனையும் தேவர் வாக்கினுற் பெற்றேம்.

சிறந்த வாழ்வில் திளைத்த காரணத்தால்தான், தன் பொருளை அறங்களுட் சிறந்த அன்புக்கு வித்திடும் தானமாம் கல்வித்தானத்திலே ஒளிர மனங்கொண்டார்கள் திருவினுர் நா. ஆறுமுகம் பிள்ளையவர்கள். தன் கணவர் கைக்கொள்ளும் அறங்களிலே தானும் பங்கு பற்றித் துணை நிற்கும் திருமதி சீதையம்மாள் 'வாழ்க்கைத் துணைநலம்' என்ற பெருமொழியினை மெய்ப்பிக்க வந்தவர்களென்பது கல்லூரிக் கொடையினுல் தெளிவுற விளங்குகிறது.

28—2—1985ல் பவள விழாக் கொள்ளும் இத்தம்பதியர் தம் அறச் செயலிலே மேன்மேலும் ஈடுபட்டு நெடுங்காலம் வாழ்ந்து பின்னேருக்கு வழிகாட்டிச் சிறந்தொளிர்க என எம் மடாலய முதற் குருநாதர், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின் திருவடிகளையும் அவர்கட்கு ஆறு முறை திருவடி தீட்சை புரிந்தருளி மஹாப்ரணவோபதேசமுஞ் செய்தருளிய எம் உபாஸனு மூர்த்தி ஸ்ரீவல்லீதேவஸேனு ஸமேத சுப்பிரமணிய மூர்த்தியின் திருவடிகளையும் வேண்டி வாழ்த்துகிறேம்.

# வந்தோரை வாழவைக்கும் வள்ளல்

### சிவாச்சார்ய குலபூஷணம் - சக்தி கருணாகர சக்கிரவர்த்தி
### மணிவிழா கண்ட மாமணி, சைவத்திரு
### தி. ஷ. சாம்பமூர்த்தி சிவாச்சார்யார்
### ஸ்ரீ காளிகாம்பாள் தேவஸ்தானம் - சென்னை

அகிலமெங்கும் இந்து சமயநெறிகள் பரவிட இடையறுது பணிபுரியும் சமயப் பண்பாளர்,

பல ஆயிரக்கணக்கான தர்ம கைங்கர்யங்களை ஆற்றிய தருமசீலர்,

வள்ளல் என்ற சொல்லுக்கே இலக்கணமாகத் திகழும் பெருந்தகை, பாரத தேசத்தின் தலைசிறந்த பெரியாருள் சிறப்புடையவர்,

தமிழ் ஸமஸ்கிருதம் ஆகிய இரு தொன்மையான மொழிகளிலும் நுண்மாண் நுழைபுலம் மிக்கவர், ஜாதி மத மொழி வேறுபாடின்றி பல இனத்தவர்களிடமும் அன்பைக் காட்டிப் பண்பாய்ப் பழகும் பெரியார்,

தமிழகத்தில் மட்டுமின்றி அயல்நாட்டிலும்கூட அனைத்துத் தெய்வ ஆலயங்களிலும் தனது பணியைத் தொண்டாற்றிய தெய்வீகத் திறன் வாய்ந்த நற்பண்பாளர். தெய்வ சாத்திரங்களில் அதிக நம்பிக்கை கொண்டவர்.

புக்கிட்பேட்டாஜாம் மங்களநாயகி ஆலயத்தில் ஸ்ரீகாக புசுண்டர் திருமேனி அமைத்துத் தனது சொந்த முயற்சியில் அதற்கென ஆலயமொன்றை நிறுவிப் பூஜை புண்ணியததை அடைந்தவர், உலகச் சிறப்புக்களில் ஒன்றான நிகழ்ச்சியாக அவர் மலேஷிய நாட்டில் நிகழ்த்தி நிறைவுபெற்ற முதல் சண்டி யாகத்தின் சிறப்பு அவரையே சாரும். தெய்வீகத் தொண்டில் திளைத்து அனைத்து நாட்டிலும் உள்ள தேவாலயங்களைச் செப்பனிடுவதில் அதிவேக ஆர்வம் கொண்டவர்.

சென்னை ஸ்ரீ காளிகாம்பாள் ஆலயத்தில் இராஜகோபுர காயத்திரி மண்டபத்தை நிறுவிய திருப்பணிச் செம்மல்.

அனைத்து ஆலயங்களிலும் நடைபெறும் குடமுழுக்குகளிலும் முக்கியப் பங்கேற்று சிறப்புற நடத்தி வைத்துப் பெருமை அடைந்த பெரியர்.

முக்கியமாக, தானத்தில் சிறந்த அன்னதானமே அவரது உயிர்மூச்சுத் தர்ம சிந்தனையாகும். அன்னதானம் செய்வதில் தனிப்பட்ட முறையில் மிக்க ஆர்வம் கொண்டவர். இன்றும் மதுரையம்பதியில் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசப் பெருமானுக்கு ஐப்பசியில் அன்னாபிஷேகம் செய்விக்கும் அற்புத பணியைச் செய்து அறநெறிகாக்கும் தருமக்காவலர்.

மலேயா நாட்டுக்குச் செல்லும் நம் தமிழ் இனத்தாரில் ஏதோ ஒரு சிலரே, அவரது உதவியை நாடாமல் திரும்புவர் என்பது திட்டத்திண்ணமாகும். பெரும்பாலோர் அவரது நல் உதவியை நாடியே தாயகம் திரும்புவர்.

தமிழர் பண்பாடு, தமிழ் வளர்ச்சி, மூச்சுக்கு மூச்சு தமிழை வளர்க்க அரும்பாடு படுபவர்.

சாதுக்களிடம் மிகுந்த அன்பு கொண்டவர். அவர்களை மிகவும் மரியாதையுடனும் அன்புடனும் நடத்தும் நல்எண்ணம் கொண்டவர்.

திருப்புத்தூரில் கலைக்கல்லூரியை நிறுவி அதனால் பலரும் பட்டம்பெற்று மாமேதைகளாக விளங்கச் செய்த கல்விக்கரசர்.

அனைவரிடமும் - எதிரியிடமும்கூட இனிமையாகப் பேசும் திறமை பெற்றவர். அவருடன் இணைந்த திருமதி சீதையம்மாள் அவர்களும், ஸ்ரீமான் நாகராஜன், தங்கவேலு ஆகிய குமாரர்களும் தர்மச்சிந்தனையில் நீதி வழுவா மன்னர்களாவர். திருப்புத்தூரில் ஸ்ரீ பூமாயியம்மன் ஆலயத்தை தனது சொந்த முயற்சியில் திருப்பணி செய்து ஆகமமணி ஸ்ரீ ஐயாமணி சிவாச்சார்யார் அவர்களைக் கொண்டு வேதாகம முறையில் குடமுழுக்கைச் செய்வித்தார்.

இயல், இசை, நாடகம், பேச்சு, கதை, கவிதை, கலை, ஓவியம், ஆடல், பரதம் இவைகளில் சளைக்காது ஆர்வம் காட்டி யாவரையும் ஊக்குவிப்பவர்.

சத்தியத்தையும் நிலைநாட்டித் தருமத்தைக் கடைப்பிடித்து அறத்தை வளர்த்து ஆன்மீக உணர்ச்சியைப் பெருக்கி இனியசொல்லால் உலகை மயக்கும் பொறுமையாளராகி பொறுமை கடலினும் பெரிதெனக்கூறும் சொல்லுக்கு இலக்கணமாகத் திகழும் நற்பண்பாளர்.

அவர் செய்த தருமம், அவர் பேசிய சத்தியம், அவர் ஆற்றிய தொண்டு, அவர் காட்டிய கருணை, அவர் வழங்கிய நீதி, அவர் வழங்கிய வாக்கு அவர் செய்யும் செயல் யாவையும் காணும்போழ்து அவரை இக்கால பாரிவள்ளல் எனக் கூறினாலும் மிகையாகாது. அவர்தன் பவளவிழா நிகழ்ச்சியன்று, அகிலம் போற்றும அன்னை ஆதிபராசக்தி சென்னை ஸ்ரீ காளிகாம்பாள் அருளாசி வழங்கி இன்னும் வைர விழா காணும் தம்பதியராக அவர்கள் வாழ அம்பிகையவள் தன் பொற்பாதக் கமலங்களைப் பற்றி இறைஞ்சி அவர்தன் சிறப்பை முடிக்க முடியாவண்ணம் அவர்தம் புகழைப் பேச நா இனிக்கின்றது.



# மணி வள்ளல் வாழ்க!

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் சிவாகமமணி
சித்தாந்த ரத்னாகரம் சிவாகம சிரோமணி
சேது சமஸ்தான ஆகம வித்வான்
M. ஐயாமணி சிவம்

திருவாடானை — 623 407
இராமநாதபுரம் மாவட்டம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை நாடு

*திருச்சிற்றம்பலம்*

புரிந்தமரர் தொழுதேத்தும் புகழ் தக்கோன் காண்
போர்விடையின் பாகன்காண் புவனமேழும்
விரிந்துபல உயிராகி விளங்கினான் காண்
விரைக்கொன்றைக் கண்ணியான்காண், வேதம்நான்கும்
தெரிந்துமுதற் படைத்தோனைச் சிரங்கொண்டோன் காண்
தீர்த்தன்காண் திருமாலோர்பாகத்தான் காண்
திருந்துவயல் புடைதழுவு திருப்புத்தூரில்
திருத்தளியான்காண் அவனென் சிந்தையானே.

*மும்மணிகள்*

நிலவுலகின்கண், பெறுதற்கரிய மக்கள் பிறவி பெற்று மாண்புடன் வாழ்ந்த, வாழுநர் பலர் உளர். அவர்களுள் ஒரு சிலர்க்கே மேலே குறிப்பிட்ட இரத்தினங்கள் என்ற சிறப்புப் பெயர்கள் பெறும் தகுதி காணப்பெறுகிறது. கல்வி, செல்வம் என்ற இரு நிதியமும் பெற்றிருந்தும் மக்களாக வாழும் தகுதி பெற்றிருப்பதில்லை என்பதைக் காண்கிறோம். காரணம் குணம் என்ற தன்மை வாய்க்கப் பெறுமையே ஆகும். மேலும் 'குலத்தளவே ஆகுமாம் குணம்' என்று கூறும் பழமொழியும் நினைத்தற்குரியது. ஈண்டு, குலம் என்றவுடன் சாதி என்று பொருள் கொள்ளற்க. எக்குலத்துப் பிறந்தோரும் ஈகை, இரக்கம், தகைமை, பக்தி முதலிய நற்குணங்கள் பெற்றவர் பலரைக் காணமுடிகிறது. குலம் என்ற சொல் இங்கு பரம்பரை என்றமை குறித்தலாகும். "கொடையும் தயையும் பிறவிக்குணம்" என்பர் ஆன்றோர்.

இவ்வாறு வழிவழி வந்த நல்ல பரம்பரையில் தோன்றிய பெருமக்கள் பலரில் மூன்று பெயர்களை, இரத்தினம் ஒளிவீசும் பொருளுக்கு இலக்கணமாக மணிகள் என்ற சொல்லால் அழைத்தல் சாலப்பொருந்தும்.

ஒன்று—செந்தமிழ்ச் சொற்களால் புனைந்து மொழிக்கு மொழி தித்திக்கும், கேட்போர் உள்ள உணர்வுகளைத் தட்டி எழுப்பும் பாக்களைப் பாடி அருளிய வாதவூரடிகள். திருவாசகத்தை வாக்கு நயம் பற்றி 'மாணிக்கவாசகர்' என்ற சொல்லில் மணியின் பெருமை கூறும் பெயரால் அழைத்தனர் ஆன்றோர்.

மற்றொன்று — நமது பாரத நன்னாட்டில் வடபுலத்தில் பிறந்து வழிவழியாக நற்குலத்து வந்த 'ஜவாகர்' என்ற வைரத்தின் பெயர் கொண்ட மறைந்த முன்னாள் தலைமைப் பிரதமர். அவரிடம் கண்ட தன்னலம் கருதாப் பெற்றியும் சமத்துவ சகோதர உணர்வும் பிறர்க்குரியாளராக வாழ்க்கை நடத்தி "வாழ்க இவ்வையகம்" என்றசிறப்பினைக் கண்டு, "மனிதருள் மாணிக்கம்" என்ற சிறப்பினை மக்கள் தந்து மகிழ்ந்தனர்.

இந்நாளில் செந்தமிழ் நாட்டிடை தோன்றி, தன்னுடைய சொந்த உழைப்பால் பொருளீட்டிக் கடல் கடந்த நாடுகளும் சென்று, அங்கும் பேரும் பெருமையும் சிறப்பும் பெற்று, மனிதப் பிறவி பெற்றோர் அனைவருமே தன்னினம் என்ற சமரச மனப்பான்மையுடன், சாதி, மத, இன வேறுபாடின்றித் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராக வாழ்ந்து அதனிடையே வந்த இன்பங்கண்டு மகிழாமலும் துன்பம் கண்டு நடுக்குறாமலும் நற்பணிகள் ஒன்றே தமது தலையாய பொற்பணி என எண்ணிக்கொண்டு தருமம், தயை, ஈதல், இரக்கம், பக்தி முதலிய நற்பண்புகள் அனைத்தும் நிறைந்து எப்பொருள் எவ்விடத்துக் காண்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் கண்டிடும் நுண்மாண் நுழைபுலமையால், தான் கண்ட உண்மைகளைப் பிறர்க்கு எடுத்துரைக்கும் வாக்கு வன்மையும் பெற்ற சிறப்புமிக்க இரத்னமாக விளங்குபவர் திருப்புத்தூர் அருள்மாமணி, கல்லூரி கண்ட வள்ளல், சித்தர் திலகம், உயர்திருவாளர் நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களே என்னில் மிகை ஆகாது. அவரை, மனிதருள் மாணிக்கம் என்று கூறுதல் சாலச்சிறப்புடையதாகும்.

இத்தகைய பெருமை வாய்ந்த வள்ளல் அவர்களின் பவள விழாவில் மலரும் பொன் மலரில், சைவமணம் கமழும் ஓரிதழாகும் வாய்ப்பை அளித்த விழாக் குழுவினர்க்கும் மனிதகுல மாணிக்கத்தின் வழித் தோன்றல் முத்துக்களான திருவாளர் நாகராஜன், திருவாளர் தங்கவேலர் என்ற இருமணிகளுக்கும் என் உள்ளங் கலந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நலம் பெருகுக !





அணிபெரும் திருப்புத்தூர் நகருக்கு
அழகூட்டும் 'ஆறுமுகம் மாளிகை.'



வியட்நாம் குடியரசு அதிபர் இங் கோ டின் டியம் அவர்களை,
வள்ளல்பெருந்தகை வரவேற்கும் சிறப்புக் காட்சி.
பினங்கு மேன்மைமிகு கவர்னர் டுன் இராஜா சர் உடா அவர்கள் உடனிருக்கிருர்·



மாட்சிமை பொருந்திய இந்தியக் குடியரசுத் தலைவர்
திரு. இராஜேந்திர பிரசாத் அவர்களுடன்
அருள்மாமணி உரையாடும் காட்சி.



1971-ல் மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களிடம், திருப்புத்தூர் மருத்துவமனைக் கட்டிடத்திற்காக, அருள்மாமணி நிதியுதவி வழங்கும் காட்சி.



மாட்சிமை தங்கிய மலேசியப் பேரரசர் அவர்கள் வள்ளல் பெருமகனுர்க்கு
ஏ. எம். என். என்னும் சிறப்புப் பட்டம் வழங்கும் திருக்காட்சி.



மாட்சிமை தங்கிய மலேசியப் பேரரசர்,
மேன்மை பொருந்திய கவர்னர், மாண்புமிகு முதலமைச்சர்
ஆகிய பெருமக்களுடன் அருள்மாமணி உரையாடும் காட்சி.



மலேசியாவில் மாண்புமிகு முதன் மந்திரி அவர்களுடன்
அருள்பெருவள்ளல் அகமகிழ்ந்து பேசிக்கொண்டிருக்கிருர்.

மலேசியாவில் செஞ்சிலுவைச் சங்கத்துக்கு
வள்ளல் அவர்கள் அன்பளிப்பாக வழங்கிய பேருந்து



செஞ்சிலுவைச் சங்கத்திற்குப் பேருந்து அளித்த
வள்ளல் மாமணியை, மலேசிய மாண்புமிகு அமைச்சர்
பாராட்டும் விழாக் காட்சி.



1957-ல் மலேசிய இந்தியக் காங்கிரஸ் மாநாட்டில்
பொதுத்தலைவர் டத்தோ வீ. தி. சம்பந்தன் அவர்களுடன்,
பிறுங்கு பி. வெ. மாகாணத் தலைவர்
திரு. நா. த. சீ. ஆறுமுகம் பிள்ளை A. M. N. அவர்கள்.



1957.ல் அருள்மாமணி கட்டிய சுங்குரும்பைக் கோயிலுக்குக்
கால்கோள் விழா நிகழ்த்திய ' அருள்மொழியரசு '
கிருபானந்தவாரியார் சுவாமிகளுடன் வள்ளல் குடும்பத்தினர்.



அனைத்துலக அறிஞர் பெருமக்களுடன் அருள்மாமணி




அரசியல் தலைவர்களின்
அத்தாணி மண்டபத்தில் . . .






மாண்புமிகு
இராம. வீரப்பன்
செய்தி-அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை-600 009

நாள் : 6—2—85

ஏழை ஒருவனுக்கு எழுத்தறிவித்தல் என்பது அறங்களில் எல்லாம் தலைசிறந்தது என்ற கருத்திற்கு இலக்கணமாய் திரு. நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் விளங்கி வந்திருக்கிறார்கள். அன்னாரின் ஆன்மீகத் தொண்டும், செல்விருந்தோம்பி வருவிருந்து காத்திருக்கும் விருந்தோம்பலும், அவர்தம் சான்றாண்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

பவள விழா காணும் திரு. நா. ஆறுமுகம் பிள்ளை — திருமதி சீதையம்மாள் அவர்கள், இறையின் அருளுடன் பல்லாண்டு — பல்லாண்டு வாழ்ந்திட வாழ்த்துகிறேன்.



# உழைப்பால் உயர்ந்த உத்தமர் வாழ்க!



*மாண்புமிகு டத்தோ ச. சாமிவேலு அவர்கள்,*
மலேசியப் பொதுப்பணி அமைச்சர்
மலேசிய இந்தியர் காங்கிரஸ் தேசியத் தலைவர்
கோலாலம்பூர், மலேசியா

பெருமதிப்பிற்குரிய அருள்மாமணி உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை — திருமதி சீதையம்மாள் அவர்களின் பவளவிழா மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்கும் வாய்ப்பினை வழங்கியமைக்குப் பெரிதும் மனமகிழ்ச்சி அடைவதுடன் எனது நன்றியையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

நாம் வாழ்க்கையில் உயர்வதற்கு நம்முடன் வாழ்பவர்களையே முன்னோடியாகக் கொண்டு அவர்களுடைய பாதையில் செல்வதற்கும் விடாமுயற்சி, சலியாத உழைப்பு, மனஉறுதியும் இருந்தால் வாழ்க்கையில் உயர்ந்து அந்தஸ்துடன் விளங்க முடியும் என்பதற்கு அருள்மாமணி அவர்கள் ஓர் எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றார் என்றால் அது மிகையாகக் கூறுவதாகாது.

வாழ்க்கைப் பாதையில் ஒவ்வொரு அடியாக முன்னேறி ஒரு நிலையை அடைவதற்குக் கடுமையாகவும் உழைக்க வேண்டும். அதே நேரத்தில் பொறுமையையும் கடைப்பிடிக்க வேண்டும். அத்துடன் நமக்கு எதிர்ப்படும் சோதனைகளைக் கால வெள்ளத்துடன் எதிர்நீச்சல் போட்டு உறுதியுடனும், மனதிடத்தோடும் தன்னம்பிக்கையுடனும், சோர்வும் சலிப்புமின்றித் தொடர்ந்து செல்வோமானால் நாம் அடைய வேண்டும் எனத் திட்டம் தீட்டிய குறிக்கோளில் வளர்ச்சியும் முன்னேற்றமும் தானும் பெற்று ஏனையோரின் வளர்ச்சிக்கும் வாழ்க்கைக்கும் வாய்ப்புக்களை வழங்க வழி கிடைக்கும் என்பதற்கு ஒரு முன்னோடியாக இருந்து அவரால் நடத்தப்பட்டுவரும் தொழில்துறை ஈடுபாட்டினைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

திருப்பத்தூரில் ஆறுமுகம் பிள்ளை — சீதையம்மாள் கல்லூரி நிறுவிப் பல பட்டதாரிகளை உருவாக்கிக்கல்விப்பணி புரிந்து வருவதுடன், மலேசியாவில் தமிழ்மொழியை மும்முரமாக வளர்க்க வேண்டும் எனும் பேரவா கொண்டு 'தமிழ்மலர்' பத்திரிகை வாங்கி அதை சிங்கையிலும், மலேசியாவிலும் சீரோடும் சிறப்போடும் வெளியிட்டார். பின்னர் அது 'தினமணி'யாகப் பெயர் மாற்றம் பெற்று வெளிவந்துகொண்டிருக்கிறது,

அரசியலைப் பொறுத்தவரையில் அருள்மாமணி அவர்கள் ம. இ. கா. வின் நீண்டகால உறுப்பினராக இருந்து பினாங்கு மாநில தலைவராகப் பதவியேற்று 1971-ம் ஆண்டுவரை தேசிய கூட்டணி உச்சமன்ற உறுப்பினராகப் பதவி வகித்துள்ளார்.

பினங்கு மாநில கூட்டணித் தலைவராக 1973ம் ஆண்டுவரை பொறுப்பேற்று மூவினங்களுக்கும் தேவையான உதவிகள் புரிந்து அனைவரின் நன்மதிப்பைப் பெற்றிருந்தார். இவரின் சேவையைப் பாராட்டி மாமன்னர் அவர்களால் ஏ.எம்.என். விருது வழங்கிக் கௌரவிக்கப்பட்டுள்ளார்,

பல்வேறு ஆலயங்களுக்கு நன்கொடை வழங்கிச் சபை வளர்ச்சிக்குப் பெரும் தொண்டாற்றி வருவதுடன், சமயத் தத்துவங்களை எடுத்துக்கூறும் ஆற்றல் படைத்தவராகவும் அருள்மாமணி விளங்குகின்றார். நிபோங் திபால் தென்னிந்திய தொழிலாளர் நலன்நிதி வாரியத்தால் நிர்வகிக்கப்படும் முதியோர் இல்லத்திற்கான 10 ஏக்கர் நிலம் இவர் வழங்கியதாகும்.

பினங்கு ஸ்ரீ ராமகிருஷ்ண ஆசிரமத்தின் துணைத்தலைவராகவும் சுங்குரும்பை ஸ்ரீ மங்களநாயகி அம்மன் கோவில், கொடிமலை அருளொளி திருமுருகன் ஆலயங்களின் தலைவராகவும், அறங்காவலராகவும் பொறுப்பு வகிப்பதுடன், மத்திய செபராங்பிறை மாவட்ட புத்தர் மத சங்க புரவலராகவும் , பினங்கு இந்தியர் சங்கத்தின் ஆயுள் உறுப்பினராகவும் செம்பிறை சங்க உறுப்பினராகவும், ஜூருஜாவி, கிரியான் ஆகிய தமிழ்ப்பள்ளிகளின் தலைவராகவும் இருந்து தொண்டாற்றி வருவதானது சமுதாயத்தின்பால் அவர் கொண்டுள்ள பற்றையும் தொண்டுள்ளத்தையும் பறை சாற்றுகின்றன.

வாழ்க்கையில் ஒய்ந்து ஒதுங்கி அமர்ந்திருந்தால் யாருமே வெற்றிகளைச் சந்திக்க முடியாது, ஏனையோருக்கும உதவியாக இருக்க முடியாது என்பதற்கு நான் குறிப்பிட்டுள்ள அருள் மாமணியின் வாழ்க்கையின் சில பகுதிகள் சான்றாக இருந்து, தன்முனைப்புச் சிந்தனையையும், மனவலிமையையும், ஊக்குவிப்பையும் தரும் என நம்புகிறேன்.

மலேசிய இந்தியர்களின் உள்ளத்தில் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ள அருள் மாமணி அவர்கள் மேலும் நீண்ட ஆயுளையும், பலத்தையும் பெற்றுப் பல்லாண்டுகள் வாழ இறையருளை இறைஞ்சி, பவள விழா எல்லா வகையிலும் சிறப்புடன் நடைபெற எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.





# வழி காட்டும் வள்ளல் வாழ்க!

மாண்புமிகு

சி. சுப்பிரமணியம்,

ஊராட்சி, வீடமைப்புத்துறை துணையமைச்சர்

ம. இ. கா. தேசியத் துணைத்தலைவர்

கோலாலம்பூர்

மலேசியா

மலேசிய இந்தியர்களின் சரித்திரத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுவிட்ட, பெரியவர் உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் பவள விழா காணுவது, அவரை அறிந்தவர்கள் அனைவருக்கும் இனிக்கும் செய்தியாகும்.

பெரியவர் உயர்திரு ஆறுமுகம் பிள்ளையவர்களை, பொதுக்கூட்டங்களிலும், தனிப்பட்ட இடங்களிலும் நான் குறிப்பிடும் போதெல்லாம், அவரை "வாழ்ந்து காட்டியவர்" என்று நான் வர்ணிப்பதுண்டு. காரணம், மலேசிய நாட்டில் இந்தியர்கள் என்ருல், தோட்டத் தொழிலாளர்கள், உடலுழைப்பாளர்கள் என்று வேருன்றிவிட்ட தோற்றத்திற்கு மாருக, மற்ற இனத்தவர்களுக்கு நிகராக, செல்வந்தராகவும், தோட்ட முதலாளியாகவும், பத்திரிகை அதிபராகவும், பல்வேறு தொழில் நிறுவனங்களின் நிறுவனராகவும் "வாழ்ந்து காட்டியவர்" பெரியவர் ஆறுமுகம் பிள்ளை ஆவார்.

செல்வம் சேருகின்ற இடத்தில் சேவை மனப்பான்மையையும், பொதுக்காரியங்களில் ஈடுபட்டு நற்பணிகளுக்கு உதவும் நல்லெண்ணத்தையும் காண்பது அரிது. பெரியவர் ஆறுமுகம் பிள்ளை அவர்களோ இதற்கு முற்றிலும் விதிவிலக்காவார். தமிழ் மலர், தினமணி, சமநீதி ஆகிய பத்திரிகைகளின் வழி, தமிழ்ப் பணி ஆற்றிய அவர், தமிழுக்காகவும் தமிழ் இலக்கியப் பணிகளுக்காகவும், தயங்காது வாரி வழங்கியிருக்கிருர். பொதுப் பணிகளுக்காகவும், மக்களுக்கு உதவக் கூடிய நற்காரியங்களுக்காகவும் மிகுந்த ஈடுபாடு கொண்டு உழைத்துள்ளார்.

சமயத்தைப் பொறுத்தவரை, தீவிர இந்துமதப்பற்ருளராக இருந்துவரும் அவர் மலேசியாவில் பல்வேறு ஆலயங்கள் திருப்பணி காண முன்னின்றவர். இந்துமதத்தைச் சார்ந்த மகான்கள் பலர் மலேசிய நாட்டுக்கு வருகைதந்து, இந்துமதப் பணிகளில் ஈடுபடவும் அவர் உதவியுள்ளார். திருப்புத்தூரில் ஆறுமுகம் பிள்ளை — சீதையம்மாள் கல்லூரியினை நிறுவியதன்மூலம் கல்விப்பணியிலும் தனது பெயரை அவர் பொறித்துள்ளார். 1960 ஆம் ஆண்டுகளில் மலேசிய இந்தியர் காங்கிரஸ் கட்சியின் வழி அரசியலிலும் முக்கிய பங்காற்றியவர் ஆறுமுகம் பிள்ளையவர்கள். இவ்வாறு சொல்லிக்கொண்டே போகும் அளவுக்கு, சிறப்புக்கள் பலவற்றின் மொத்த உருவாகத் திகழும் உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள், நான் பழகிய விதத்தில் ஒரு பெரியவருக்குரிய பண்புகளையும், நல்ல பல பழக்க வழக்கங்களையும் கொண்டவராகத் திகழ்கின்ருர். அவரது பவள விழா காண்போர் வியக்கும் வண்ணம் சிறப்புற நிறைவேற, எனது நெஞ்சார்ந்த நல்வாழ்த்துக்களைக் கூறுவதுடன், பெரியவர், மேலும் பல்லாண்டு நீடுழி வாழ்ந்து தமிழ்ப் பணி ஆற்ற, எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

# மகத்தான மனிதராம் மணிவள்ளல் வாழ்க !



மாண்புமிகு டத்தோ கு. பத்மநாபன்
மலேசியச் சுகாதாரத் துணை அமைச்சர்
ம. இ. கா. தேசிய உதவித்தலைவர்

அருள்மாமணி என். டி. எஸ். ஆறுமுகம் பிள்ளை - திருமதி. சீதையம்மாள் அவர்களின் பவள விழாவுக்கு வெளியாகும் மலரில் சில வரிகளை வரைந்துவைப்பதில் உண்மையில் பெருமைப்படுகிறேன்,

அருள்மாமணி அவர்களை எனக்கு நீண்ட நாட்களாகவே தெரியும். கடுமையான உழைப்பினாலும், தன்னம்பிக்கையினாலும் வாழ்க்கைப்படியில் உயர்ந்த நிலையை அடைந்த அருள் மாமணிஅவர்கள், நம சமூகத்தினருக்குப் பெருமை சேர்க்க வல்லவராவார். தாம் உயர்ந்ததைப்போலவே, பிறரும் உயரவேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்தோடு பல உதவிகளையும் உந்துதல்களையும் வழங்கியுள்ளவர். இன்றும்கூட, ''வாழ்க்கையில் முன்னேறியுள்ள மலேசிய இந்தியர்கள்'' என ஒரு பட்டியலைத் தயாரித்தாலும் அதிலே அருள்மாமணியே முன்னணி வகிப்பார். இந்திய இனத்தைப் பிறரும் மதிக்க வேண்டும் என்பதற்காகப் பல ஊர்களில் ஆலயங்களையும் மண்டபங்களையும் அமைத்துத் தந்துள்ளார். பிறருக்குத் தெரிந்தது போக, தெரியாமலேயே பல ஏழைகளுக்கும், ஏழை மாணவர்களுக்கும் அவர் செய்த பொருளுதவி ஏராளம்.

மலேசிய நாட்டின் அரசியலிலும் சிறப்பான பங்கினை ஆற்றியுள்ள அருள்மாமணி அவர்கள், தற்போது அத்துறையிலிருந்து ஒதுங்கியுள்ளார். மலேசிய இந்தியர்கள் கூட்டுச் சேர்ந்துள்ள ஆளும் கட்சியான கூட்டணிக் கட்சியில் பினாங்கு மாநிலத் தலைவராகப் பணியாற்றி, இப்பதவியை வகித்துள்ள ஒரே ஒரு இந்தியர் என்ற புகழும் அவருக்கு உண்டு.

வாழ இடமில்லாத முதியோர்களுக்கு ஒரு இல்லத்தை அமைத்திட தமது சொந்த நிலத்தை அரசிற்கு நன்கொடையாக வழங்கியுள்ளார். வளர்ந்து வரும் சமுதாயத்திற்கு வழிகாட்டிட தமது தமிழ்ப் பத்திரிகை '' தின மணி ''யினை அர்ப்பணித்

துள்ளார். சமயமும், மொழியும், கலையும் நமது சிறப்புக்களாக விளங்க தமது பொருள் வளத்தை வாரி வாரி வழங்கியுள்ள வள்ளல் இவர். அவருடைய சமூகம் எல்லையற்றது. மலேசியா போக, தமிழகத்திலும் அவர் கல்லூரியினைக் கட்டியுள்ளார். இந்நாட்டில் பெற்ற பெயரையும் புகழையும் தமிழகத்திலும் நிலைநாட்டியவர் அருள் மாமணி. ஒருவருக்கு உதவவேண்டுமென்ற முடிவை எடுத்துவிட்டால் எந்த நிலையிலும் உதவியபின்னரே மறு செயலில் இறங்குவார். எடுத்த முடிவில் பின்வாங்கத் தெரியாத உரமான நெஞ்சினை உடையவர் அருள்மாமணி. உடல் தளர்ந்தாலும், உள்ளம் சோராத அருள்மாமணி அவர்களினால் இந்திய சமூகமும், மலேசியத் திருநாடும் பெருமைப்படாமல் இருக்கமுடியாது. அன்னாரின் சேவைக்காகவே, அவர் பெயரில் ஒரு சாலையே உள்ளதை எண்ணி மலேசிய இந்தியர்கள் பெருமைப் படுகிறார்கள்.

இந்திய சமூகத்தோடு, நம் சமயமும் வாழவேண்டும்-வளரவேண்டும் என்ற வேட்கை கொண்ட அவர், சமயத் துறையில் இப்போது ஈடுபாடு கொண்டு சிறந்த உரைகளையும், கட்டுரைகளையும் வழங்கி ஆயிரமாயிரம் நெஞ்சங்களையும் கவர்கிறார்.

பல்வேறு பட்டங்களையும் கொண்டாலும்கூட, சமய சேவைக்காகக் கிடைத்த 'அருள்மாமணி' என்ற பட்டமே அவருக்கு என்றும் நிலைத்து நிற்கும்.

நாம் வாழும் காலத்தில் நம் சமூகத்திற்குப் பெருமையினைச் சேர்க்கும் ஒரு மகத்தான மனிதரைக் கொண்டுள்ளதை எண்ணி நாம் பெருமையடைவோம். அருள்மாமணி அவர்கள் தம் துணைவியாரோடு நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்வாங்கு வாழவேண்டுமென வாழ்த்துகிறேன்.

நன்றி, வணக்கம்.



# வரலாறு படைக்கும் வள்ளல் வாழ்கவே !



*மாண்புமிகு செனட்டர் M. G. பண்டிதன்*
*ம. இ. கா. தேசிய உதவித் தலைவர்* *கோலாலம்பூர்*
*மலேசியா*

எங்கள் அருள்மாமணித் தம்பதிகள் என்றும் பவளம் போல் வாழ்கவே !

அருள்மாமணி தம்பதிகள் பவளவிழாக் காண்பது கண்டு அக மகிழ்ச்சியடைகின்றேன் !

அருள்மாமணி ஓர் வாழ்க்கை நூல் !
அருள்மாமணி ஓர் அனுபவ இலக்கியம் !
அருள்மாமணி ஒரு புதிய வரலாறு !
அருள்மாமணி ஓர் சகாப்தம் !
அருள்மாமணி ஓர் உலகம் !
அருள்மாமணி இந்த நூற்றுண்டின் திருக்குறள் !

வள்ளுவன் வாசுகிபோல் வாழ வேண்டும் என்பது பழைய மொழி !

அருள்மாமணித் தம்பதிகள்போல் வாழ வேண்டும் என்பது புதிய மொழி ! மிகப் பொருத்தமான மொழி ! அருள்மாமணி தம்பதிகளுடன் பேசிப் பழகி அன்பையும் பெற்று அறிவையும் பெற்று அனுபவப் பாடங்களையும் கேட்டுப்பெற்று, விருந்தோம்பல் அனுபவத்தையும் பெற்று அவரின் அன்புக்கு அடிமையாகிவிட்ட லட்சக்கணக்கான பேர்களில் நானும் ஒருவன். அதை ஒரு பேருக ஒரு பாக்கியமாகக் கருதுகிறேன் ! என் அரசியல் வாழ்க்கைக்கு அடித்தளமிட்டவர்களில் அருள்மாமணி முதலிடமும் முக்கிய இடமும் வகிக்கிருர் ! அவர் காட்டிய அன்பு, அவர் காட்டிய ஆதரவு, அவர் காட்டிய பரிவு, அதுவே எனக்கு வந்த உயர்வு !

என் மணவிழா அருள்மாமணி முன்னிலையிலும் தேசியத்தலைவர் டத்தோ சாமிவேலு தலைமையிலும்தான் நடந்தது ! தந்தை இல்லாத குறையைப் போக்கி, தாய் இல்லாத குறையை நீக்கி, தந்தைக்குத் தந்தையாகவும், தாய்க்குத் தாயாகவும் முன்நின்று திருமணத்தை நடத்தி வாழ்த்திய அந்தக் காட்சி என் வாழ்நாளில் மறக்க முடியாத இனிய நிகழ்ச்சி !

அந்த நிகழ்ச்சியில் அருள்மாமணி அவர்கள் ஆயிரக்கணக்கான மக்கள் முன்னிலையில் கூறிய அந்த வார்த்தைகள் ... ... ...

"ஞானபண்டிதனுக்கு, சிரமங்கள் வரும்போதெல்லாம் ஆறுமுகம் பிள்ளை என்ற கப்பல் வந்து கரை சேர்க்கும்."

இந்த வாழ்த்துரையை என் வாழ்நாளில் மறக்கத்தான் முடியுமா ?

பாரி வள்ளலை நான் பார்த்ததில்லை ! கர்ண வள்ளலையும் நான்கண்டேன் இல்லை !

இருவரும் இன்று அருள்மாமணி உருவில் இங்கே வாழ்ந்து கொண்டிருக்கின்றனர் !

வாழவேண்டும் ! வாழவேண்டும் !

உலகு உள்ளவரை இவர்கள் வாழவேண்டும் !

எங்கள் அருள்மாமணித் தம்பதிகள் என்றும் பவளம்போல் பார்புகழ வாழ இறைவன் அருள்புரிவானுக ! வாழ்க அருள்மாமணி குடும்பத்தினர் !

# எதிர்ப்புக்கு அஞ்சாத ஏந்தலே வாழ்க!

திருச்சுடர் கே. ஆர். இராமசாமி, A. M. N.

மலேசிய திராவிடர் கழக தேசியத் தலைவர்

அருள்மாமணி என். டி. எஸ். அவர்களது பவள விழா திருப்பத்தூரில் நடைபெறுவதறிந்து மலேசிய திராவிடர் கழகத்தின் சார்பில் நெஞ்சார்ந்த வாழ்த்துதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அருள்மாமணி அவர்கள் தமிழ்ப் பற்றாளர், சமுதாய நலன் கருதிப் பணியாற்றுபவர்களுக்கு ஊக்கமளிப்பதில் சிறந்தவர். வாழ்க்கையில் எதிர் நீச்சல் போட்டு வாழ்ந்து வருபவர். தனக்குச் சரியெனப் பட்டதில் உறுதியாக நிற்பவர். அந்தக் கருத்துக்கு எப்படிப்பட்ட எதிர்ப்பு வந்தாலும் அதனை எதிர்கொள்வதில் அவருக்கு நிகர் அவர் தான் என்று சொல்லுமளவுக்கு உறுதியாக நிற்பவர்

அவரது பொது வாழ்வுப் போராட்டங்கள் மலேசியாவில் நினைவு கொள்ளத் தக்கதாக அமைந்திருந்த ஒன்றாகும். மலேசியத் தமிழ் மக்கள் அருள்மாமணி என். டி. எஸ். அவர்களைப் பற்றி அறியும் வண்ணம் வாழ்ந்து காட்டியவர்.

மலேசிய ஏடான 'தமிழ் மலர்' நாளேட்டிற்கு நெருக்கடி வந்து, அதனால் பல இலட்சக் கணக்கான வெள்ளிகள் இழப்பீடுகள் வந்தபொழுதும், மனந்தளராது 'தினமணி' ஏட்டினைத் தொடங்கி நடத்தியது, தமிழ்ச் சமுதாயத்தின்பால் அவர் காட்டிய உணர்வையும், எடுத்துக் கொண்ட குறிக்கோளில் உறுதியானவர் என்பதையும் உறுதிப்படுத்தின.

மலேசிய திராவிடர் கழகத்தின் சில கொள்கைகளில் அவருக்கு மாறுபட்ட கருத்துக்களிருந்தாலும், சமுதாய சீர்திருத்தப் பணிக்கும், இனமான உணர்வுகளுக்கும் தம்முடைய ஆதரவுகளைத் தயக்கமின்றி நல்கி வருபவர்.

ஆண்டுக்கு ஓரிருமுறை அவரைச் சந்திக்கும் வாய்ப்பு பெறப்படும்பொழுதெல்லாம், தமிழ்ச் சமுதாய நலன், மொழி, கழகத்தின் பணிகள் பற்றி மனந்திறந்து கருத்துரைப்பார்.

தனி மனிதரானாலும் சமுதாயத்தில் எதிர் நீச்சல் போட்டு, எதிர்ப்பையே உரமாக்கி, கொண்ட குறிக்கோளில் உறுதியாக வாழ்ந்து வரும் அருள்மாமணி என். டி. எஸ். அவர்கள் தொடர்ந்து சமுதாயத்தின் வளர்ச்சிக்குத் தொண்டாற்றிட அன்புடன் கேட்டுக் கொள்கின்றேன்.



# கூட்டுறவு வளர்த்த குணக்குன்றே வாழ்க!

கே. ஆர். சோமசுந்தரம், ஏ. எம். என்., ஜே. பி.
பொது நிர்வாகி, தேசிய நலநிதி கூட்டுறவுசங்கம் லிமிடெட்,
கோலாலம்பூர். மலேசியா,

அருள்மாமணி உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களை 1958-ம் ஆண்டு முதல் அறிவேன். தமிழர்களின் அபிமானத்தைப் பெற்றவராகவும், கலை கலாச்சார அமைப்புக்களோடு அணுக்கமாக உறவும் கொண்டிருந்ததுடன், அரசியலில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். பினங்கு மாநில மலேசியர் இந்தியர் காங்கிரஸ் தலைவராகவும், அம்னோ, மலேசிய சீன சங்கம், மலேசிய இந்தியர் காங்கிரஸ் ஆகிய மூன்றும் இணைந்திருந்த ஆளும் கூட்டணிக் கட்சிக்குத் தலைவராகவும் இருந்து சேவையாற்றியுள்ளார். ஆளும் கட்சி கூட்டணிக்கு மாநில ரீதியில் தலைமையேற்ற ஒரே இந்தியர் என்ற பெருமை அவரைச் சாரும். பழகுவதற்கு இனியவர், சொல்பவைகளைக்கேட்டு, நிதானமாக ஆலோசனைகளையும், கருத்துக்களையும் தெளிவாக வழங்கும் பண்பாளர். அவருடன் உரையாடும்போது ஆங்கிலம் கலவாத தனித் தமிழில் ஆழமான கருத்துக்களோடு பேசும் ஆற்றலைக் காணலாம்.

இந்தியர்களின் பொருளாதார விழிப்புணர்வுக்குப் பெரிதும் உதவியிருக்கின்றார் என்றால் மிகையாகாது. பெரும் தோட்டங்களை வாங்கும் தொழிலில் அவர் ஈடுபட்டிருந்தபோது, பல இந்தியர்கள் சிறு தோட்டங்களுக்கு உரிமையுள்ளவர்களாகும் நிலைமையை ஏற்படுத்தித் தந்தார். பலர் சிறு சிறு நிலங்களைப்பெற்று, சொந்தக்காலில் நிற்கவும், அதன்வழி தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ளவும் உதவியுள்ளார்.

தோட்டங்கள் என்று கூறும்பொழுது, என் மனதில் நிலைத்து நிற்கும் அவரது பெருந்தன்மை நினைவிற்கு வருகிறது. 1960-ம் ஆண்டு தோட்டங்கள் துண்டாடலுக்கு இலக்காகிக் கொண்டு வந்த நேரம். அருள்மாமணி அவர்களும், தோட்டங்களை வாங்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த காலம். கடாரத்தில் புக்கிட் சீடிம் தோட்டம் விலைக்கு வந்தது. அதனைச் சுலபமாக அவர் வாங்கி பெரும் பணம் ஈட்டியிருக்கலாம். கூட்டுறவு சங்கம் வாங்க முயற்சிக்கிறது எனத் தெரிந்து, அவர் தலையிடாமல் இருந்ததுடன், தோட்டத்தை கூட்டுறவு சங்கம் வாங்க, அதன் தலைவர் துன் சம்பந்தன் அவர்களுக்கு உதவியாக இருந்தார் என்பதனை மறந்துவிட முடியாது.

விருந்தோம்பல் என்பது அவருடன் பிறந்த பண்பு. பசி இல்லாவிட்டாலும், அவரது இல்லத்திற்கு வருவோர்க்கு இவரது அன்பான உபசரிப்பு தவிர்க்க முடியாதவாறு அமைந்துவிடும், அவர் காட்டும் இனிய அன்பும் பண்பும். இன்றும் இந்நாட்டிற்குவரும் சமயத் தலைவர்கள், கலைஞர்கள், எழுத்தாளர்கள் என எவர்வரினும் அவர்களை வரவேற்று உபசரித்து விருந்தோம்பும் பண்பில் தனித்து விளங்குபவர் வள்ளல் உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள்.

அருள்மாமணி உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் சமயத்துறைக்கும் குறிப்பிடத்தக்க பங்கினை ஆற்றியிருக்கிறார். எங்கெல்லாம், திருப்பணி நடக்கிறதோ அங்கெல்லாம் அவர் பெயரும் நன்கொடையும் இருக்கும். பல ஆலயங்கள் எழுவதற்கு அவரது ஊக்குவிப்பும், கொடையும் காரணமாக அமைந்தது என்று கூறலாம் பினுங்கு இராமகிருஷ்ண மடத்திற்கு பல ஆண்டுகளாக தலைமையேற்றுவரும் அவர் அண்மைக் காலங்களில் ஆன்மீகத் துறையில் வியக்கத்தக்க வகையில் ஞானமும் விளக்கமும் பெற்ற ஒருவராக பிரதிபலிக்கிறார். அவர் வழி பலருக்கு ஆன்மீக வளர்ச்சி ஈடுபாடு உண்டாகியுள்ளது என்பதை மறுக்க முடியாது.

உயர்திரு. நா. ஆறுமுகம்பிள்ளை—திருமதி சீதையம்மாள் அவர்களின் பவள விழா சிறப்புடன் நிகழ்ந்திட நல் வாழ்த்துக்களைத் தெரிவித்து, எல்லாவல்ல இறைவன் இந்த பெருந்தகைகளுக்கு ஆசி வழங்க பிரார்த்திக்கிறேன்.



# திருப்பணி யாற்றும் செல்வரே வாழ்க !



R. S. மணியம் ஏ. என். எம்., பி. ஜே. கே.
தலைவர், இந்திய வாலிபர் சங்கம்,
செந்தூல்,
கோலாலம்பூர்.

எழுபது வயது நிறைவு காணும் பெருமகனுர் என். டி. எஸ். ஆறுமுகம் பிள்ளை அவர்களின் பவள விழாவை ஒட்டி வாழ்த்துச் செய்தியினை வழங்குவதில் செந்தூல் இந்திய வாலிபர் சங்கம் பெருமிதம் கொள்கிறது.

சுதந்திரத்திற்குப் பிந்திய மலேசிய இந்திய மாணிக்கங்களில் ஒருவராகத் திகழும் அருள்மாமணி என். டி. எஸ். ஆறுமுகம் பிள்ளை அவர்கள் எழுபது அகவையினை எட்டியும். நமது கலாச்சாரம் மற்றும் சமயப் பணிகளில் வற்ருத ஆர்வத்துடன் தீவிரத் தொண்டாற்றி வருவது பாராட்டுக் குரியது.

கோவில் திருப்பணிகள் வழியும், பத்திரிகாப் பணிகள் வழியும் இந்நாட்டில் இந்திய சமூகத்தினரின் இதயங்களில் நீங்கா இடம் பெற்றவராய்த் திகழும் அருள்மாமணி அவர்கள், இன்னும் பல்லாண்டு காலம் வாழ்ந்து, தொடர்ந்து நாட்டிற்கும் சமூகத்திற்கும் சீரிய பங்கினை ஆற்றிவர வேண்டுமாய் எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்ருேம்.

வாழ்க அருள்மாமணி ! வளர்க அவரது தொண்டு !



# சாதனை படைக்கும் தலைவரே வாழ்க!

வி. எல். கோடிவேல், ஜே. பி.
தலைவர், ஸ்ரீ மகா மாரியம்மன் கோவில் தேவஸ்தானம், கோலாலம்பூர்

பெருநிலக்கிழார் என்றும், வள்ளல் என்றும், அருள்மாமணி என்றும் மலேசிய மக்களால் போற்றப்படும் உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை - திருமதி சீதையம்மாள் அவர்களின் பவள விழா மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

உயர்திரு. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் வழங்கியுள்ள அறக்கொடைகள் மலேசிய நாட்டில் தமிழ்-தமிழர்கள் உள்ளளவும் அவருடைய சிறப்பைப் பறைசாற்றிக்கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

மலேசியத் தமிழர்கள் வரலாற்றில், அருள்மாமணி அவர்கள் ஒரு முன்னோடியாக வாழ்ந்தவர். இனி அப்படி ஒருவர் உருவாகிட முடியுமா என்பது சந்தேகமே.

தமிழையும்-சமயத்தையும் இரண்டு கண்களாகக் கருதி, அதன் வளர்ச்சிக்குப் பாரியைப் போன்று வாரி வழங்கியவர் வள்ளல் அவர்கள்.

ஆழ்ந்த அறிவும், சமய ஞானமும், நெஞ்சுரமும் ஒருங்கே நிரம்பப்பெற்றவர் பெருநிலக்கிழார் அவர்கள். இது அவருக்குக் கிடைத்த இறைவனின் திருவருளாகும். ஸ்ரீ மகாமாரியம்மன் கோவில் தேவஸ்தானத்தின் திருமுறை மாநாடுகளில் தலைமையேற்று வியத்தகு வகையில் சமயச் சொற்பொழிவாற்றியிருப்பது அதற்குச் சான்றுகளாகும்.

'இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்.'

என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்து கொண்டிருப்பவர் உயர்திரு ஆறுமுகம் பிள்ளை அவர்கள்.

வாழ்க்கைப் பயணத்தில் எதிர்நீச்சல் போட்டு, எதிர்பட்ட இடர்களையெல்லாம் தகர்த்து ஏற்றம் பெற்று, துன்பத்திலும் இன்பமாக வேதனைகளைத் தாங்கிச் சாதனைகளையே படைத்து. தோல்வியையே வெற்றியாகக் கருதி, எல்லா நிலையிலும் இன்முகம் காட்டி ஏறுபோல் நிமிர்ந்து, இமயம்போல் நிலைகுலையாமல் வாழ்ந்து. 'தமிழ் மலர்' ஏடு தடுக்கப்பட்டதும் 'தினமணி'யை ஒலிக்கச் செய்துகொண்டிருக்கும் உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் பவள விழா கொண்டாடும் இவ்வேளையில், அவரது வைர விழாவை எதிர்பார்த்து அவருக்கு உடல் நலமும், நீண்ட ஆயுளும் பெற்று நீடூழி வாழ எல்லாம்வல்ல பராசக்தி அன்னை மகா மாரியம்மனை வேண்டி இறைஞ்சுகின்றேன்.



# கல்விக் கோயில் கண்ட கலைவள்ளல் வாழ்க!

டாக்டர் பி. பி. நாராயணன்.
பொதுச்செயலாளர்,
தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம்
மலேசியா

தினமணி அதிபர் அருள் மாமணி என். டி. எஸ். ஆறுமுகம் பிள்ளை அவர்களின் பவள விழாவினை முன்னிட்டு சிறப்பு மலர் வெளியிடுவது குறித்து மகிழ்கிறேன்.

சாதாரண நிலையில் தன் வாழ்வைத் துவங்கி, தமது திறமையாலும், நுணுக்கத்தாலும் பெரும் பொருளீட்டியவர் திரு என். டி. எஸ். பல்வேறு விதமான வர்த்தகங்களிலும், தொழில் துறையிலும் ஈடுபட்டு, பெரும் செல்வந்தர்களாகத் திகழும் திறன் நம் சமுதாயத்தவர்களுக்கும் உண்டு என நிருபித்த ஒரு சிலருள் திரு. என். டி. எஸ் குறிப்பிடத்தக்கவர்.

பொருளீட்டியதுடன் நின்றுவிடாமல், சமயச் சேவையும் 'தினமணி' மூலம் தமிழ்ச் சேவையும் அவர் ஆற்றி வருவது போற்றிப் பாராட்டத்தக்கது.

ஏராளமான தெய்வ ஸ்தலங்களுக்கு நிதி உதவி அளித்திருக்கின்றார். கோவில்களுக்குக் கும்பாபிஷேகங்கள் நடத்தி வைத்திருக்கின்றார். பல கோவில்களைப் புதுப்பிக்கக் காரணகர்த்தாவாக இருந்திருக்கின்றார். சமயம் சார்ந்த கூட்டங்களில் கலந்துகொண்டு சமயப் பிரசாரங்கள் செய்து வருகின்றார். அவரது சமயச் சொற்பொழிவுகள் இந்து சமயத் துறையில் அவர்களுக்கிருக்கும் ஆழ்ந்த பற்றுதலையும் புலப்படுத்துகின்றன. இந்தியாவிலிருந்து தமிழ் அறிஞர்களையும் வரவேற்று உபசரித்து அவர்களது சமயப் பிரச்சாரக் கூட்டங்கள் நடைபெற உதவி செய்துள்ளார் — உதவி வருகின்றார்.

மனிதர் சமுதாயத்தின் கல்வி முன்னேற்றத்திற்காக உலகில் எந்த மூலையில் எவர் பாடுபட்டாலும் அவர்கள் போற்றுதற்குரியவர்கள். ஆயிரம் கோவில்களைக் கட்டுவதைவிட ஓர் ஏழைக்கு எழுத்தறிவிப்பதால் ஏற்படும் புண்ணியம் கோடி எனப் பாரதியார் சுட்டிக்காட்டுகின்றார்.

அதற்கொப்ப திரு. என். டி. எஸ். ஆறுமுகம் பிள்ளை அவர்கள் கல்வி மேம்பாட்டிற்காகச் செய்திருக்கும் காரியங்களையும் நாம் குறிப்பிட்டுப் பாராட்ட வேண்டும்.

ஒரு காலத்தில், இந்நாட்டில் பெரும்செல்வந்தர்களாக விளங்கியவர்கள், சமயத் துறையில் காட்டிய தீவிர ஈடுபாட்டைப்போல் கல்வித் துறையிலும் காட்டியிருந்திருப் பார்களானால் இன்று நம் மக்களில் 90 விழுக்காட்டினர் படித்தவர்களாகத் திகழ்ந் திருப்பர். எனினும், இன்னும் காலம் தாழ்ந்துவிடவில்லை. நம் சமுதாயத்தைச் சேர்ந்த செல்வந்தர்கள், நம் சமுதாயத்தின் கல்வி மேம்பாட்டிற்காகத் தாராளமாக உதவ முன்வரவேண்டும்.

அருள்மாமணி என். டி., எஸ். ஆறுமுகம் பிள்ளை அவர்கள் இத்தகைய கல்விச் சேவைக்கும் செல்வந்தர்களுக்கு ஓர் முன் உதாரணமாகத் திகழ்கின்றார். அவரது சமுதாயச் சேவைகள் மென்மேலும் பெருகவும் — அவர் நீண்ட ஆயுளுடனும், ஆரோக்கி யத்துடனும் விளங்கித் தமது சமுதாயப் பணிகளைத் தொடரவும் அவரது பவள விழாவில் நமது வாழ்த்துக்களைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

அவர்தம் தினமணி நாளிதழ் மற்ற தினசரிகளைப் போலவே தொழிலாளர் சமுதாயத்தின் குரலுக்கு முக்கியத்துவம் கொடுத்து வருவதற்காகவும் இச்சந்தர்ப்பத்தில் நன்றியைத் தெரிவிப்பதுடன், பவள விழா எல்லா வகையாலும் சிறப்புறவும் வாழ்த்துகின்றோம்.

வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு

எப்படி உலகில் மனிதன் ஒவ்வொரு வழியிலும், கல்வி யிலும், சம்பாதிப்பதிலும், தனக்கென்று தேடிக்கொள்வதிலும், சேமித்துக்கொள்வதிலும், வாழ்வதிலும், முயல்கிறானே, அதைப் போலத் தனக்கு அந்திய (மரண) காலம் ஒன்று இருக்கிறது என்ற உணர்வோடு, அதை எப்படித் தன் அறிவின் தெளிவால், தனக் கென்று அதை ஏற்றுக்கொள்வது (சமநிலை என்ற சமாதி) என்ற நிலையை அவன் தெரிந்து கொள்ளவேண்டும், என்று சொல்வதைக் காட்டிலும், கற்றுக் கொள்ள வேண்டும் என்று சொல்வது மேல் (மரணத்திற்குத் தன்னை ஜாக்கிரதையாகத் தயார்ப்படுத்திக் கொள்வது).

— 'சிவ தத்துவம்' - அருட்பெரும் வள்ளல்

வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு

# அஞ்சா நெஞ்சினர் அருள்மாமணி

டாக்டர் வி. டேவிட்

கோலாலம்பூர், மலேசியா

அருள்மாமணி, வள்ளல் ஐயா உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை, திருமதி சீதை யம்மாள் அவர்களின் பவள விழா நடைபெறவிருப்பதை அறிந்து பெருமகிழ்வெய்தினேன்.

ஐயா அவர்களுடன் நெருங்கிப்பழகி அவரின் குணநலன்களை அறிந்துகொள்ளும் வாய்ப்புப் பெற்றவன் நான். அவர் அஞ்சாநெஞ்சம் கொண்டவர். எதிர்ப்புக்கு, பயமுறுத்தல்களுக்குப் பணியாத தன்மை கொண்டவர். அடுத்தவரின் ஆலோசனையை மட்டும் கேட்டுச் செயல்படாது சொல்லப்படுபவைகளைச் சீர்தூக்கிப் பார்த்து முடிவெடுப்பவர்.

பத்திரிகைத்துறையில் ஈடுபட்டு ஒரு தினசரி வெளியிட்டு தமிழுக்கும், தமிழர்களுக்கும் பெரும்பணியாற்றிவரும் ஐயா, சமயப் பணிகளிலும் பெரும் ஈடுபாடு கொண்டுள்ளார். அவரின் அன்பு, பண்பு, விருந்தோம்பல், ஏழைகளின் துடைக்கும் கருணைக் கரங்கள் போன்றவை குறித்து எவ்வளவு எழுதினாலும் போதாது

இவற்றுக்கெல்லாம் சிகரமாக, தமிழ்நாட்டில் அவர் உருவாக்கியிருக்கும் கல்லூரி விளங்குகிறது. பெரிய பெரிய தனவந்தர்கள் தங்களின் சந்ததியினருக்குச் சொத்து சேர்த்து வைப்பதில் முனைப்பாக இருக்கையில் ஐயா, இளைஞர்களின் கல்விக்காகத் தன்பொருளைச் செலவிட்டுள்ளார். ஆயிரமாயிரம் இளைஞர்கள் இவரின் இந்தச் சீரிய பணியினால் மேன்மையுற்று சமுதாயத்தையும் மேம்படுத்துவார்கள்.

ஐயாவின் பவள விழா தென்னகத்தில் நடைபெறுவதோடு, மலேசியாவிலும் நடைபெறவேண்டும் என நான் விரும்புகிறேன். அவ்விழாவில் ஆசிபெறவும் என்னைப் போன்றோர்க்கு இது வாய்ப்பளிக்கும்.

ஐயாவும், அவர்தம் துணைவியாரும் பல்லாண்டு காலம் சீரோடும், சிறப்போடும் வாழ வாழ்த்துகிறோம்.



# வரலாறு படைத்த வள்ளலே! வாழ்க!

பூ. அருணாசலம், பி. பி. என்,
செயலவை உறுப்பினர், மலேசிய தமிழ் எழுத்தாளர் சங்கம்
சங்கத்தி - சுங்கை சிப்புட்

மலேசிய மக்களால் — அருள்மாமணி என்றும் — பெருநிலக்கிழார் என்றும் — கருணை மிகுந்த வள்ளல் என்றும் — பத்திரிகை அதிபர் என்றும் போற்றிப் பாராட்டப்பெறும் பெருந்தகை உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை ஏ. எம். என். —திருமதி. சீதையம்மாள் தம்பதிகளின் பவள விழா, கடல் கடந்த திருப்புத்தூரில் நடைபெறுவது அறிந்து உள்ளம் மகிழ்வு கொள்கிறது.

அன்பும் அறனும் பண்பும் மிகுந்த அருள்மாமணி தம்பதிகள்
பல்லாண்டு பல்லாண்டு வாழ்க வாழ்க என்றும் இதயம் வாழ்த்துகின்றது.

மலேசிய நாட்டில் வாழுகின்ற பல்லின மக்களின் பேரன்பைப் பெற்றவர் அருள் மா மணியாவார்.

அரசியல், சமயம், சமுதாயம், பத்திரிகைத்துறை இப்படிப் பலவற்றில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு, நாளும் உழைப்பவர் அவர். அத்தகைய வழிகளில் சிறப்பாக சேவையாற்றி முத்திரையைப் பதித்தவரும் அவரே.

நாட்டின் முதலாவது பிரதமர், சுதந்திரத் தந்தை துங்கு அவர்களோடு அணுக்க மான உறவையும், நட்பையும் பெற்று, கட்சிப் பணிக்குத் தன்னையே அர்ப்பணமாக் கிக்கொண்டவர் என்பதும் குறிப்பிட வேண்டியதாகும்.

அம்னோ, ம.சீ ச, ம.இ. கா. மூன்றும் இணைந்த கூட்டணிக்கு, பல ஆண்டு காலம் பினாங்கு மாநிலத்திற்கு தலைவராக இருந்து பணியாற்றிய — மலாயரல்லாத பெருமை இவர் ஒருவரையே சாரும். அத்தகைய வரலாற்றைப் படைத்தவர் அருள்மாமணி யாவார்.

பினாங்கு மாநில ம.இ.கா.வுக்கு தொடர்ந்து 16 ஆண்டுகள், எதிர்ப்பில்லாமல் ம. இ. கா வுக்குத் தலைவராக இருந்த பெருமையும், வரலாறும் உண்டு.

மலேசிய மாமன்னரால் ஏ. எம். என். என்னும் விருதினையும் அவர்கள் பெற்றுள் ளார்கள்.

மலேசிய நாட்டில் ம.இ.கா. தலைவராகவும், சுதந்திரத்திற்காகப் பாடுபட்டவரும், இந்திய சமுதாயத்தின் பொருளாதார வழி காட்டியாகவும் திகழ்ந்த கனம் துன். வீ. தி. சம்பந்தன் அவர்களோடு, அரசியல், பொருளாதாரத் துறைகளில் மிக மிக அணுக்க மான உறவைக் கொண்டு அரசியல் துறையில் ஒளிர்விட்ட வரலாறும் உண்டு.

மலைநாட்டில் சமயச்சேவை ஓங்கவும், திருப்பணிக் கடமைகள் நிறைவு பெறவும், கல்விப் பணிகள் தடையின்றி நடைபெறவும், சளைக்காமல் வாரி வாரி வழங்கிய பெருமை இவருடைய கரங்களுக்கு உண்டு.

பவளவிழா காணும் அருள்மாமணித் தம்பதிகள், பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து, மேலும் சமுதாயம் உய்ய, சமயம் வளர, தளர்வறியா மனத்தை அன்னை கந்தன்மலை வீரமா காளியம்மன் வழங்க வேண்டுமென பிரார்த்தித்து வணங்கி, வாழ்த்துகின்றேன்.



மலேசியாவில் தனது தொழிற்சாலையில் உற்பத்தியாகி ஏற்றுமதியான ரப்பர் கட்டி ஜப்பானில் தாளாக மாற்றப்படுவதை ஆராய்கிறர் தொழிலதிபர் அருள்மாமணி.



மதுரை கணேஷ் அச்சகத்தைப் பார்வையிட்டு ஆலோசனை வழங்குகிறர் வள்ளல்.



பல்கலைக் கல்விக்குக் கல்லூரி எழுப்பிய பண்பாளர்
பட்டமளிப்புப் பேருரை நிகழ்த்தும் பாங்கான காட்சிகள்.





இறைவனின் அலகிலா விளையாட்டை ஆய்ந்துணர்ந்த வள்ளல்
இளைஞர்களின் விளையாட்டையும் கண்டு மகிழ்கிறார்.



வெற்றி பெற்ற டென்னிஸ் வீரர்களுக்கு
வெற்றிக்கோப்பை வழங்குகிறார் வள்ளல்.

# நற்றொண்டுச் செல்வர் நலமுடன் வாழ்க !

முத்தமிழ்க் காவலர்
கி. ஆ. பெ. விசுவநாதம் திருச்சிராப்பள்ளி

## வாழ்த்து

கல்லூரி கண்ட கலை அறிஞரும், கொடைவள்ளலும், திருப்புத்தூர் அருள் மாமணியுமாகிய உயர்திருவாளர் நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களின் பவள விழா அண்மையில் நடைபெறவிருக்கிறது என்ற செய்தியும், அதன் நினைவாக மலர் ஒன்று வெளிவரவிருக்கிறது என்ற செய்தியும் என்னை மகிழ்விக்கின்றன.

விழா இனிது நடைபெற வேண்டுமெனவும், மலர் நல்லறிஞர்களின் கட்டுரைகளைத்தாங்கி வெளிவந்து நாடு முழுதும் நன்மணம் வீச வேண்டுமெனவும், வள்ளல் திரு. நா. ஆ. அவர்கள் இன்னும் பன்னெடுங்காலம் நல்லுடல் நலத்துடன் இருந்து நாட்டுக்கும், மொழிக்கும், மக்களுக்கும் நற்றொண்டுகள் பல புரிந்து சிறப்பெய்தி வாழவேண்டுமெனவும் இறைவனை வணங்கி முழுமனதுடன் வாழ்த்துகிறேன்.



# அள்ளிக்கொடுக்கும் அருள்நெஞ்சர் வாழ்க!

நா. மகாலிங்கம், B. Sc., F.I.E.

சக்தி நிலையம்
பொள்ளாச்சி

அருள்மாமணி, கல்லூரி கண்ட கலை வள்ளல் உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை, திருமதி சீதையம்மாள் அவர்கட்கு பவளவிழா நிகழுவ தறிந்து பேருவகை கொள்ளுகின்றேன்.

அருள்மாமணி ஆறுமுகம் பிள்ளையவர்கள், பழகுவதற்கினிய பண்பினர், பண்பு தவழ உரையாடும் அன்பினர், அறிவு செறிந்த ஆன்மீக நிறைவினர், வருவிருந்து வைகலும் ஓம்பி மனமகிழும் திருநிறைந்த செல்வியர் "தாதா கோடிக்கு ஒருவர்" எனும் தமிழ்மொழி வாசகத்தை உண்மையென உணர்த்தி, கல்விக்கு அள்ளிக் கொடுத்த கரங்கொண்ட அருள் நெஞ்சர்.

அன்னார் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு இந்தப் பாருலகில் வாழ்ந்து எல்லா நலனும் சிறந்து, இப்பாரதப் பெரு நாட்டிற்குப் பெருமை சேர்க்க வேண்டும் என்று, எல்லாம் வல்ல அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரை மனமொழி மெய்களில் வந்தித்து வாழ்த்துகிறேன்.



# வள்ளல் வாழ்க பல்லாண்டு!

திரு. வி. என். சிதம்பரம் செட்டியார் அவர்கள்
தக்கார், மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம், மதுரை.

"வானில் தெரியும் விண்மீன்களுக்குச் சந்திரன் அணி கலன்;
கணவன், மனைவிக்கு அணிகலன்; அரசன் குடிகளுக்கு அணிகலன்;
கல்வியறிவோ அனைவர்க்கும் அணிகலன் ஆகும்"

என்று சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம் குறிப்பிடுகிறது. படிக்காதவனுக்கு அவன் வாழும் ஊரே சரியாகத் தெரியாது. படித்தவனுக்கு எல்லா உலகங்களும் சொந்தமாகின்றன. எனவே இறக்கும் வரையில் படித்துக்கொண்டே இருக்க வேண்டாமா? என்று கேட்கிறார் திருவள்ளுவர்,

யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு?

என்பது குறள். நீரின்றித் தாகம் அடங்காது. கல்வியறிவின்றித் தேவையானதைப் பெற முடியாது. கல்வியைக் கொடுத்தவன் கண்ணைக் கொடுத்தவன். "கண்ணுடையர் என்பவர் கற்றோர்"—என்று வள்ளுவம் பேசுகிறது. பின்தங்கிய பகுதியான திருப்புத்தூரில் பள்ளிக்கூடங்களும் கல்லூரியும் எழுப்பி ஆயிரக்கணக்கானவர்களுக்குக் கண்கொடுத்த வள்ளல் ஆறுமுகம் பிள்ளையாவார்கள்.

சிவபெருமானுக்கு ஐந்து முகங்கள் உண்டு. அடியார்களுக்கு அருள்செய்ய இந்த ஐந்து முகம் போதாது என்று ஆறுமுகம் பெற்றுச் சிவபெருமானே முருகப் பெருமானாகத் தோன்றினான். ஆறுமுகம் அருள் கொடுக்கும். ஆறுமுகம் பிள்ளையவர்களும் இப்பகுதியில் கல்விப் பயிர் வளர்க்கும் பெரும்பணியில் ஒப்புயர்வற்றுத் திகழ்கிறார்கள்

செல்வம் கொடுத்தால் செலவழிந்து போகும். கொடுத்த கல்வி வளருமேயன்றிக் குறையாது. கொடுத்தவனுக்கும் குறைவில்லை. வாங்கிக்கொண்டவனுக்கும் குறைவில்லை. வள்ளல் அவர்கள் இந்தக் கல்விப் பணியால் சரித்திரத்தில் இடம் பெற்றுவிட்டார்கள்.

அம்மையோடிணைந்து அப்பன் காட்சியளிப்பது போல ஆறுமுகம்பிள்ளையவர்கள் தன் மனைவி சீதையம்மாளுடன் இணைந்து பெருந்தொண்டாற்றிக் கல்லூரிக்குப் பெயர் வைத்திருக்கிறார்கள். சிறந்த சிவபக்தரும் திருமுறைகளில் அழுத்தமான பற்றுள்ளவரும் ஆகிய ஆறுமுகம் பிள்ளையவர்கள் கடல் கடந்து தொழில் செய்து, திரைகடல் ஓடித் திரவியம் தேடி அதைத் தமிழகத்தின் நல்வாழ்வுக்குத்தந்திருக்கிறார்கள். தம்முடைய மகன்களையும் இப்பணியில் ஈடுபடுத்தி இந்தத் தொண்டு வாழையடி வாழையாக வளர்ந்து வரச் செய்திருக்கிறார்கள்.

வள்ளலுக்கு இன்று எழுபதாண்டு நிறைகிறது என்று சொல்கிறார்கள். அவரைப் பார்த்தால் என்றும் இளமையோடு இருக்கும் ஆறுமுகப்பெருமானாகத் தெரிகிறது. எழுபதாண்டான இளைஞனாக விளங்கும் திருநிறைசெல்வர் ஆறுமுகம் பிள்ளையவர்கள் தம் இல்லத்தரசியாருடனும் குழந்தைகள் உற்றார் சுற்றத்துடனும் பல்லாண்டுபயன் சுரக்க வாழ்க என்று அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய் அழகன் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறேன்.

# வள்ளல் பெருந்தகை!

திரு. P. R. ராமசுப்பிரமணிய ராஜா, B. Sc.,

சேர்மன்,

ராம்கோ தொழில் நிறுவனங்கள், ராஜபாளையம்.

---

எங்கள் குடும்பத்தின் நெடுநாளைய நண்பரும், தனது விடாமுயற்சியாலும், பண்பாலும் வாழ்க்கையில் வெற்றிகண்டு பல சிறப்புகளைப் பெற்றவருமான வள்ளல் பெருந்தகை உயர்திரு ஆறுமுகம் பிள்ளை அவர்களின் பவள விழாவை விமரிசையாகக் கொண்டாடுவது சாலவும் பொருந்தும். அது மகிழ்ச்சிக்குரியதுமாகும். அயல் நாட்டில் குடியேறி அம்மக்களிடையே வாழ்ந்து அச்சமுதாயத்தில் தலைசிறந்த ஒருவராக உயர்வது, எல்லோராலும் அடையக்கூடிய ஒரு எளிய சாதனை அல்ல. திரு பிள்ளையவர்கள் இத்தகைய சாதனையைப்புரிந்து தான் பிறந்த நாட்டிலும் புகுந்த நாட்டிலும் பெரும் புகழ் எய்தியிருக்கிறார்கள்,

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற முதுமொழிக்கிணங்க திரு பிள்ளையவர்கள் மலேசியா நாட்டில் குடியேறி அங்கு தனது சுய முயற்சியால் பெரும் பொருள் ஈட்டி அந்நாட்டின் செல்வந்தர்களில் ஒருவராகச் சிறப்படைந்துள்ளார்கள். தான் ஈட்டிய பெரும் செல்வத்தைத் தன்னலமின்றி மனித சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்த வேண்டும் என்ற பேருள்ளம் கொண்டு கல்விப் பணிக்கும் அறப்பணிகளுக்கும் தாராளமாக உதவியிருக்கிறார்கள், 'ஆயிரம் அன்ன சத்திரம் வைத்தலுக்கு ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் உயர்ந்த தர்மம்' என்ற பாரதியின் வாக்கை மெய்ப்பிக்கும் முறையில்; தான் பிறந்த மண்ணில் - திருப்புத்தூரில் - பெரிய கல்லூரி ஒன்றை நிறுவி அப்பகுதி மக்களின் முன்னேற்றத்திற்குச் சிறந்த சேவை செய்துள்ளார்கள். அறப்பணிகள் பலவற்றிற்கும் தாராளமாகப் பொருள் உதவி செய்து இறையருளைப் பெற்றுப் பெருமையுடன் வாழ்க்கை நடத்தும் அவர்களின் பவள விழாவைச் சிறப்பாகக் கொண்டாடுவது, சமுதாய முன்னேற்றத்திற்காக தியாகமும் சேவையும செய்த பெரியோர்களை நன்றியுடன் போற்றும் தம் பண்டையப் பண்புகளை நாம் போற்றிக் காத்துவருகிறோம் என்பதையே கோடிட்டுக் காட்டுகிறது. அனைவரிடமும் அன்புடன் பழகும் அவர்களின் நற்பண்பும், நற்காரியங்களுக்குத் தயங்காது மனமுவந்து உதவும் கொடை உள்ள

மும் அவர்கள்பால் நமக்குள்ள அன்பையும் பன்மடங்கு பெருக்குகிறது.

திரு பிள்ளை அவர்களின் தொண்டு சிறக்க அவர்களின் மனப்பக்குவத்தை நன்கு உணர்ந்து அவருடன் மனமார ஒத்துழைத்து ஊக்கமூட்டிவரும் அன்னாரின் வாழ்க்கைத்துணைவியார் திருமதி சீதையம்மாள் அவர்கள் அனைவரின் பாராட்டு தலுக்கும் நன்றிக்கும் உரியவர்களாவார்கள். தான் துவங்கிய நற்பணிகள் தொடரவும் சிறப்பாக நடக்கவும் ஆற்றல்மிக்க போற்றுதற்குரிய புத்திரரைப் பெறும்பேறு திரு. பிள்ளையவர்களுக்குக் கிடைத்திருப்பது அவர்கள் நல்வினைப் பயனே ஆகும். திரு. நாகராஜன் அவர்கள் தன் தந்தை அவர்கள் துவங்கிய பணிகள் அனைத்தையும் சீரும் சிறப்புமாக நடத்திவருவது அனைவருக்கும் மகிழ்ச்சி அளிக்கிறது.

பாரத நாடு மிகப் பெரிய நாடு. மக்கள் தொகையோ 70 கோடியை மிஞ்சி விட்டது. இவ்வளவு மக்களின் முன்னேற்றத்தையும் அரசின் முயற்சிகள் மட்டுமே உறுதிப்படுத்திவிட முடியாது. வள்ளல் திரு ஆறுமுகம் பிள்ளை அவர்கள் போன்ற கொடை உள்ளம் படைத்த பெருமக்களின் சேவையும் உதவியும் பெரிதும் இதற்குத் தேவைப்படுகிறது. அத்தகைய சேவை மனப்பான்மையையும் தியாக சிந்தனைகளையும் இந்த பவள விழா நம் மக்களிடையே தூண்டிவிடும் என்பதில் ஐயமில்லை.

வள்ளல் திரு ஆறுமுகம் பிள்ளையவர்கள் மேலும் பல்லாண்டுகாலம் நலமுடன் வாழ்ந்து நம் மக்களுக்குச் சிறந்த தொண்டாற்ற எல்லாம் வல்ல இறைவனின் அருளை வேண்டுவோமாக !




வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு

தமிழ்தான் ஞானமொழி, சமஸ்கிருதம் வேதமொழி. பதினெண் சித்தர்கள் தமிழில்தான் ஞானம் பாடியிருக்கிறார்கள். வேதகர்த்தாக்களாகிய சப்தரிஷிகளும் வேதங்களைச் சமஸ்கிருதத்தில் சொல்லியும், ஞானப்பாடல்களைத் தமிழில் சொல்லியும் இருக்கிறார்கள். தமிழைப் படித்தால்தான் ஞானத்தை உணரலாம்.

' கற்குழி ' - அருட்பெரும் வள்ளல்

வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு

# வருவிருந்து எதிர்கொள்ளும் வள்ளல் வாழ்க!

பேராசிரியர் S. V. சிட்டிபாபு
துணைவேந்தர்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்

## பவள விழா வாழ்த்து

திருப்பத்தூர் அருள்மாமணி உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை - திருமதி சீதையம்மாள் அவர்களின் பவளவிழா 28—2—85 அன்று நிகழ இருக்கிறது அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன். திருப்பத்தூர் அருள்மாமணி அவர்கள் பல்லாயிரம் மாணவர்கள் பயில்வதற்கேற்ற கல்லூரியைத் தோற்றுவித்துக் கல்வியின் பயனை எல்லோரும் துய்க்க வழி செய்துவரும் பெருந்தகைமை படைத்தவர்கள். எவரையும் தமராகக் கருதிப் பழகும் பண்புடையவர்கள்.

"வருவிருந்து எதிர்கொண்டு ஏற்று நயனுரை
வழங்கும் ஓசை
அருகிருந்து அடிசிலூட்டி முகமன் நன்கு அறையவும்"

என்று திருவிளையாடற் புராணம் கூறுவது போல் விருந்து உபசரிப்பதைத் தலையாய கடமையாகக் கொண்டவர்கள். நூல் பல நுண்ணிதின் கற்கும் பயிற்சியும், கற்று உணர்ந்த உயர்ந்த கருத்துக்களைப் பிறர் உள்ளம் ஏற்கும் வகையில் எளிதாக எடுத்துரைக்கும் சொல்லாற்றலும் உடையவர்கள். நன்னெறியோடு வாழும் கோட்பாடும், நன்மை பயப்பதையே சிந்தித்துச் செயலாற்றும் திறனும் இயல்பாகவே அமையப் பெற்றவர்கள்.

இத்தகைய எல்லா நலன்களும் வாய்க்கப் பெற்ற அவர்களின் பவளவிழா மிகவும் சிறப்பாக நடைபெறவும், அவர்கள் குடும்பத்துடனும் சுற்றத்துடனும் நண்பர்கள் புடை சூழ நீடு இனிது புகழுடன் வாழவும் இறைவன் அருள்பாலிப்பாராக.



# வள்ளல் அருள்மாமணி நா. ஆறுமுகம் பிள்ளை

பேராசிரியர் சு. ந. சொக்கலிங்கம், எம். ஏ.,
கல்லூரிக் கல்வித் துணை இயக்குநர், மதுரை மண்டலம்,
மதுரை-1

உயர்திருவாளர் வள்ளல் அருள்மாமணி நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் பவள விழா அழைப்பிதழ் பெற்றேன். மகிழ்ந்தேன். பதினைந்தாம் வயதில் கடல் கடந்து சென்று, இடைவிடாத முயற்சியின் காரணமாக திரவியம் தேடியவர். தாம் தேடிய திரவியத்தைத் தம் குடும்பத்திற்கும், தாம் பிறந்த ஊர் மக்களுக்கும், மற்றவர்களுக்கும், அன்புடன் வழங்கியவர். இவருடைய வாழ்க்கையை நினைக்கும்போது,

'ஆக்கம் அதர்வினுய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையா னுழை' —என்னும் குறள் நினைவுக்கு வருகிறது.

இவர் வாழ்வு இந்தக் குறளுக்கு இலக்கணமாய் அமைகின்றது. பேரறிவாளியின் செல்வம், நற்பண்பு உடையவரின் செல்வம், பெருந்தகைமை உடையவரின் செல்வம், எவ்வெவ்வாறு பயன்படும் என்று வள்ளுவர் பின்வரும் குறள்களில் தெளிவாய்க் குறிப்பிடுகின்றார்.

'ஊருணி நீர்நிறைந்தற்றே உலகவாம்
பேரறிவாளன் திரு,'

'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்'

'மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்'

இவர் மூன்றாவது வகையைச் சேர்ந்தவராக, எல்லாவகையிலும் பிறருக்கு நெஞ்சாரப் பயன்படும் கோட்பாடு உடையவராகத் திகழ்கிறார். செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்போம் எனினே, தப்புன பலவே' என்னும் பழங்காலத் தமிழர் கருத்தினை நன்கு உணர்ந்தவர். எனவே வரையாது கொடுக்கும் வள்ளலாக விளங்குகிறார்.

'உள்ளது சிதைப்போர் உளர் எனப்படார்' என்னும் வரியின் பொருளுணர்ந்து, சிங்கப்பூர் சென்று, மெய்வருத்தம் பாராது அறவழியில் செல்வம் தேடி, பல நல்ல காரியங்களை முறையாகச் செய்யும் இவரைப் பாராட்டுகின்றேன். நூறாண்டுகள் வாழ வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகின்றேன்.



டாக்டர் சி. வேங்கிடசுப்பிரமணியன்
எம். ஏ., பி. எல்., பி. எச். டி.,
உறுப்பினர்




மாநிலத் திட்டக்குழு,
எழிலகம், சென்னை-600 005

# உயர்வையே உள்ளும் உயர்வள்ளல் வாழ்க!

திருப்பத்தூர் அருள் இமயம், வள்ளல் திருவாளர் நா. ஆறுமுகம் பிள்ளை — திருமதி சீதையம்மாள் அன்னாரின் பவள விழா 28—02—1985 அன்று சீருடனும், சிறப்புடனும் நடைபெற இருப்பது கேட்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன்.

அருள்மாமணியுடன் நெருங்கிப் பழகி அன்னாரது பல்வேறு திறன்களைக் கண்டு வியந்தவன் நான். "உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்" என்ற பொய்யா மொழிக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் பெரியார் திரு. ஆறுமுகம் அவர்கள். இம்மட்டோ?

"நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது"

என்ற வள்ளுவரின் வாக்கிற்கிணங்க பினாங் மலையில் தமிழ்ப்பொதிகையாய், தமிழ்த்தென்றலாய் நின்று தமிழ்கூறும் நல்லுலகத்துக்கே ஒரு கலங்கரை விளக்க மாகத் திகழும் பெரியார் திரு. நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள், தமிழுக்கும், நம இந்து சமயத்துக்கும் அன்னார் ஆற்றிவரும் தொண்டு அளவிடற்பாலது அன்று.

அவர்களது வாழ்க்கையின் குறிக்கோளைக் கூறவேண்டுமானால் வசன நடையில் பூரணமாக இயலாது. அதற்குப் பதில் புலவர் குழந்தையின் வரிகளைக் கொண்டு விளக்கலாம்.

"நாடெல்லாம் புலவர் கூட்டம்
நகரெல்லாம் பள்ளி ஈட்டம்
வீடெல்லாம் தமிழ்த்தாய்க் கோட்டம்
விழவெல்லாம் தமிழ்க் கொண்டாட்டம்
பாட்டெல்லாம் தமிழில் தேட்டம்
பண்ணெல்லாம் தமிழ்க் கூத்தாட்டம்
மாடெல்லாம் தமிழ்ச் சொல்லாட்டம்
வண்டமிழகத்துமாதோ".

இப்படி நாடு முழுவதும் தமிழில் ஆக்கம் பரவ, தெய்வீக இந்துமதம் தழைக்க அன்னாரும் அன்னாரது குடும்பத்தினரும் செய்துவரும் தொண்டு வரலாற்றில் பொன்னில் பொறிக்கப்பட வேண்டியவை. அருமருந்தன்ன திரு. நாகராஜன் திரு. தங்கவேலு போன்ற நல்ல மைந்தரை ஈந்த திருமதி சீதையம்மாள் அவர்கள் "புலியைப் பயந்த பொன்மான்" ஆகிறார்கள்.

வள்ளல் திரு. ஆறுமுகம் பிள்ளை அவர்களும் அன்னாரது துணைவியார் அவர்களும் பல்லாண்டு, பல்லாண்டு வாழ, வேண்டுதல் வேண்டாமை யிலானடி பணிகின்றேன்.



பேராசிரியர், தி. அ. சொக்கலிங்கம், எம், ஏ., எம்.லிட்.,
டீன்
கல்லூரி வளர்ச்சிப் பிரிவு,
மதுரை - காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

# ஊருக்கு நிதி சேர்த்த ஒருவர்

உங்களில் யாராவது திருப்புத்தூர் ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரியைப் பார்த்திருந்தால் ஒன்றைத் தெரிந்திருப்பீர்கள்; — அதுதான் அந்தக் கல்லூரியின் "போர்டிகோ"; வள்ளல் ஆறுமுகம் பிள்ளையின் உள்ளத்தைப் போல நீளமும் அகலமும் உயரமும் கொண்டது; அவர்தம் மனம்போல உறுதியும் உரமும் வாய்ந்தது; நானும் எவ்வளவோ கல்லூரிகளுக்குப் போயிருக்கிறேன் — இப்படிப் பட்ட ஒரு பெரிய 'போர்டிகோவை' பார்த்ததே இல்லை — உள்ளே நுழைந்த உடனே நமது மனமே ஒரு கோபுரம் போலல்லவா உயர்கின்றது? நமக்கே இப்படி என்றால் இங்கு படிக்கின்ற மாணவரின் உள்ளமும், பயிற்றுவிக்கின்ற ஆசிரியரின் எண்ணமும் வளர்வதற்குக் கேட்கவா வேண்டும்? "வெள்ளத் தனையமலர் நீட்டம்" — என்ற வரிகளே இப்போது ஞாபகத்துக்கு வருகின்றன.

திருப்புத்தூரில் இக்கல்விக் கோவிலை உருவாக்கிய வள்ளல் திரு. நா. ஆறுமுகம் பிள்ளையின் பவள விழா என்று அறிந்தபோது எனக்கு இந்த 'போர்டிகோ'தான் நினைவுக்கு வந்தது. கல்லூரி மட்டிலுமா கண்டார்? உயர்நிலைப்பள்ளி, மருத்துவ மனை, இப்படிப் பல அறநிலையங்கள் அவர்தம் கொடையால் அங்கு உருவாயின. திருப்புத்தூரில் திருவினைச் சேர்த்தவர் பலர்; ஆனால் திருப்புத்தூருக்கு திருவினைச் சேர்ந்தவர் ஒருவரே — அவரே நமது பவள விழா நாயகர் திரு 'நா. ஆறு' என்று சொல்லும் அளவுக்குத் தம் கொடைச் சிறப்பால் இவ்வூரை வளமாக்குகிறார்.

தென்மாப்பட்டில் என் நண்பர் ஒருவர் உண்டு; சோமசுந்தரம் அவர் பெயர்; எம். ஏ. படித்துவிட்டு 'லேவாதேவி' வியாபாரம் செய்து வருகிறார்; வள்ளலைப் பற்றி அடிக்கடி அவர் பேசியது இப்போது ஞாபகத்துக்கு வருகிறது. மலேசியா வில் ஒரு தெருவுக்கே 'வள்ளல் ஆறுமுகம் பிள்ளை தெரு' என்று பெயராம். அந்த அளவுக்குத் தம் கொடையாலும் வள்ளல் தன்மையாலும் 'மலைவாழ் மக்களைக்' கவர்ந்திருக்கிறார். தமிழகத்திலிருந்து அங்கு போகிற அறிஞர் அனைவரையும் அங்கு "தாயாகித் தாங்குபவர்" நமது வள்ளல் என்று அவர்தம வள்ளல்தன்மை யில் 'குளித்த' தம்பி தமிழ்க் குடிமகன் சொல்லிக்கொண்டிருப்பார். இப்படிப் பலரும் புகழும் வள்ளல் பெருமகனார் இன்னும் பல ஆண்டுகள் வாழ்ந்து தமிழ்ச் சமுதா யத்துக்கும், சைவ உலகுக்கும் பலன்தரவேண்டும் என்பதுவே என் ஆசை; பிரார்த்தனை;

திருப்புத்தூரில் வள்ளல் ஏற்றிவைத்த கல்விச் சுடரை இவர்தம் மக்கள் இருவருமே— திருவாளர்கள் ஆறு. நாகராஜன், ஆறு. தங்கவேலு—இவர்கள் எண்ணெயாகவும், திரியாகவும் இருந்து கண்ணை இமை காப்பது போலக் காத்து வருகின்றனர் ; வாழையடி வாழை ; இதில் என்ன புதுமை இருக்கிறது ?

ஊருணி நீராய் வாழ்ந்து வருகின்ற பவள விழா நாயகர் இன்னும் பல்லாண்டு வாழ இறைவன் திருவருளை வேண்டுகிறேன். அவர்தம் அறங்கள் பொதிகைமலைப் பிறந்த மொழி வாழ்வறியும் காலமெலாம் வாழும் ; நின்று நிலைக்கும்.



வள்ளல் வாக்கு ⁜ வள்ளல் வாக்கு ⁜ வள்ளல் வாக்கு

முன் வாழ்ந்தவர்களால் செய்த தர்மங்கள் நிலைத்து நிற்பதை நாம் வாழ்க்கையில் பார்க்கின்றோம். சாவு ஒன்று இருக்கிறது : தேடியதை வைத்துவிட்டுப் போகப் போகிறோம் என்பதை உணர்ந்து அவன் தர்மம் செய்வானானால், எம வாதனை இன்றி அவன் ஆத்மா நிச்சயம் பிரிகின்றது. தர்மம் செய்து பக்குவம் அடைந்த மனம், தன்னை உணர்ந்த மனமாகின்றது. ஆனதால் அவன் மறுபிறப்புக்குத் தன்னைப் பாக்கியவானாக ஆக்கிக் கொள்கிறான்.

—'யாக்கை நிலையாமை' —அருட்பெரும் வள்ளல்

வள்ளல் வாக்கு ⁜ வள்ளல் வாக்கு ⁜ வள்ளல் வாக்கு

# அருள்மாமணி தம்பதிகள் வாழிய நீடு !

டாக்டர் திருமதி ஸ்டெல்லா சௌந்தரராஜ்
M. Sc. (Lond), B. T., Ph. D.,
முன்னாள் - கல்லூரிக் கல்வி இயக்குநர், சென்னை

அருள்மாமணி உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை ஏ. எம். என். — திருமதி சீதையம்மாள் அவர்கள் பவள விழா 28—2—85 அன்று நடப்பதறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன், பெருமைப்படுகிறேன்.

"நல்லோரைக் காண்பதுவும் நன்றே, நல்லோர் சொற் கேட்பதுவும் நன்றே" நல்லோருடன் பழக வாய்ப்புக் கிடைப்பது எல்லாவற்றையும்விட நன்றே. இத்தம்பதிகளின் அன்பையும் ஆதரிப்பையும், பராமரிப்பையும், அவர்களின் பெறற்கரிய அளவு கடந்த நட்பையும், குடும்பத்தின் அங்கத்தினருள் ஒருவர்போல் பழகவும், நடத்தப் படவும், எனக்கு கிடைத்த பாக்கியமும் சலாக்கியம் ஆண்டவன் எனக்கு அருளிய அரிய கிருபையாகவும் ஆசீர்வாதமாகவும் இன்றும் என்றும் கருதுகிறேன்.

துணைஇயக்குநராகக்கல்லூரிக் கல்வித்துறையில்யான்பணியாற்றியபோதுஉயர்திரு ஆறுமுகம் — திருமதி சீதையம்மாள் அவர்களின் தவப்புதல்வர், தவப்புதல்வர்களில் மூத்தவரான திரு. என். ஏ. ஆர். நாகராஜன் அவர்களை ஆறுமுகம் — சீதையம்மாள் கல்லூரிக் கல்விக்கூட செயலர் (Correspondent) என்ற முறையில் சந்திக்கும் வாய்ப்பு நேர்ந்தது. பின்னர் அவர் சகோதரர் திரு தங்கவேலு அவர்களையும் அறியும் வாய்ப்புக் கிட்டியது. திரு. நாகராஜன் அவர்கள் மூலம் அவருடைய தாய் தந்தையர், குடும்பத்தினரிடமும் பழக நேரிட்டது. பழகப் பழக, தந்தை தாய், குடும்பத்தினர் அனைவரின் பண்பும், பாசமும், நேர்மையும், பழகுந் தன்மையும் என்னை வசிகரித்தன.

ஆறுமுகனார் மிகச் சாதாரண நிலையிலிருந்து தன்னுடைய விடாமுயற்சியால் மனஉறுதியால், பேருழைப்பால் பொருள் ஈட்டியவர். அதுவும் தாயகத்திலல்ல — அயலகத்தில்...

ஆம். அருள்மாமணி அவர்கள் மலேசியாவில் குறிப்பிடத்தக்க பெரும் கோடீஸ்வரர் என்பது அல்ல அவரது பெருமை ! அவர் ஒரு பெரிய கொடை வள்ளல் என்பதே அவருக்கு ஏற்பட்டிருக்கும் உயர்ந்த பெருமைக்கெல்லாம் மிகப்பெரிய பெருமையாகும்.

தான் ஈட்டிய பொருளை ஊருணி நீரைப்போலவும், பழுத்த மரத்தைப்போலவும் சாதி, இன, மத, நாடு என்ற வேறுபாடு கருதாமல் எல்லோருக்கும் வாரி வழங்கி உதவியிருக்கிறார். தான் பிறந்த மண்ணான திருப்புத்தூரிலேயே கல்வி நிலையம் உண்டாக்கி ஏழை எளிய மக்களுக்கு கல்விக்கண் திறந்துள்ளார்.

கனிவான இதயம் கொண்டவர் ; நல்ல பண்பாளர் ; உண்மையைத் தேடுவதிலும் கடவுள் நாட்டத்திலும் பற்றுடையவர். மலேசியாவிற்கு தமிழகத்திலிருந்து செல்லும் அனைவரையும் வரவேற்று உபசரித்து உதவுவதில் முன்னணியில் நிற்கும் கொடையரசர்.

இவருடைய இல்லத்தரசி சீதை அம்மாள் அவர்களுடன் நான் நெருங்கிப் பழகி இருக்கிறேன். கணவன், மனைவி எப்படி வாழவேண்டும்; எப்படிப் பிறரை வாழ்த்த வேண்டும்; மற்றவர்களை எப்படி வாழவிட வேண்டும் என்பதற்கு ஒரு எடுத்துக் காட்டாக இத்தம்பதியரின் வாழ்க்கை அமைந்திருப்பது கண்டு மெத்தவும் போற்றினேன். வாழு, வாழவிடு, வாழச்செய் என்ற நோக்கில் தெளிவுடையவர்கள் இத்தம்பதிகள்.

அருள்மாமணி ஆறுமுகம் பிள்ளை என்றால் அருளரசி சீதை அம்மாள் என்று சொல்லவேண்டும். அவ்வளவு பாசமும், பழக்கத்திற்கு உரிய நேசமும் உடையவர் சீதை அம்மாள். அவர்கள் எனக்கு ஆசி வழங்கினார்கள்.

அவர்களுடைய நல்வாழ்த்துக்குப் பின்புதான் எனக்குப் பதவி உயர்வு கிடைத்தது என்ற நம்பிக்கை எனக்கு உள்ளது. குழந்தை உள்ளமும், தெய்வீக மனமும் கொண்ட சீதை அம்மாள் எனக்குக் கிடைத்த நட்பின் பெருமையாக இன்றும் கருதுகிறேன்.

இவர்களுடைய பிள்ளைகள் மிகஉயர்ந்த ஒழுக்கமுடையவர்கள். திரு. நாகராஜனும் ஏனைய புதல்வர்களும் பெற்றோர்களைப் போலவே அன்பு செலுத்தும் ஆர்வலர்கள். நன்மக்கட் பேறாக வாய்த்த இச்செல்வங்கள் தங்கள் பெற்றோர்கள் வழியில் செயற்கரிய செயலாற்றி வருகின்றனர்.

பவள விழாக் காணும் தம்பதிகள் பெருவாழ்வு, வளவாழ்வு, அருள்வாழ்வு தொடர்ந்து பல்லாண்டு, பல்லாண்டு காலம் வாழ்ந்து கர்த்தரின் கிருபையால் மேலும் சிறப்படைய விரும்புகிறேன். தேவன் தாமே தம்பதிகளையும் குடும்பத்தினரையும் சகல இகபர நன்மைகளுடன் ஆசீர்வதிக்க வேண்டுகிறேன்.



வள்ளல் வாக்கு ❋ வள்ளல் வாக்கு ❋ வள்ளல் வாக்கு

ஒவ்வொருவரும் திருமந்திரம் படிக்கவேண்டும். மனிதனை நடமாடும் கோயில் என்று திருமூலர் கூறுகிறார். மனிதன் என்ற சொல்லுக்கு மனு ஈசன் என்று பேறுபெற்றவன். மனிதா! நீ ஈசுவரத் தன்மை பெற்றவன், என்று அறிவின் சுடராகத் தட்டி யெழுப்புகின்றார் மனிதனை. அதனால்தான் அவனை நடமாடும் கோயில் என்றும். உள்ளம் பெரும் கோயில் என்றும், தன் பாடல்களில் சொல்கிறார். மனிதனை அவன் அறிவில் உயர்த்தி அவனை அவனுகும் நிலையைப் பெறச் செய்கின்றார்.

— 'கணேசர் தத்துவ விளக்கம்' - அருட்பெரும் வள்ளல்

வள்ளல் வாக்கு ❋ வள்ளல் வாக்கு ❋ வள்ளல் வாக்கு

# ஆன்மீக பலம் கொண்ட அருள் வள்ளல் வாழ்க !

**மதுரைத் தமிழ்ச் சங்கம்**
(நிறுவனர் - வள்ளல் பாண்டித்துரைத்தேவர் அவர்கள்)

ஆர், காசிநாதத்துரை (Ex.) M. P,,
துணைத் தலைவர்.

54, தமிழ்ச் சங்கச் சாலை,
மதுரை-625 001.

திருப்பத்தூர் வள்ளல் ஆறுமுகம் பிள்ளை அவர்களுடைய அசைக்க முடியாத பக்தியைப்பற்றி பல வருடங்களுக்கு முன்பே அறிவேன். அவர்களுக்கு சித்தர்கள் பூலோக வாழ்க்கையிலே, பற்று; அதை விட, சித்தர்கள் சமாதியிலிருந்து கொண்டுஆன்மீக பலம் மற்றவர்களுக்குத் தருவதில், பிள்ளை அவர்களுக்கு ஆழ்ந்த நம்பிக்கை. மேலே மேலே தொடர்ந்த ஆராய்ச்சி: இவைகளே வள்ளல் அவர்களிடம் நாம் காணும் சிறப்பு. அருளோடுபொருளும் நல்ல காரியங்கள் செய்வதற்கு வேண்டும் என்பதற்காக, விடா முயற்சி. அதே நேரத்தில் லௌகிகத்திற்காகத் தன் லக்ஷ்யங்களை விட்டுக் கொடுக்காத தன்மை. வீட்டிலே எல்லா வசதிகளோடும் எளிய வாழ்க்கை! நேரில் பார்த்தவர்களுக்குத் தெரியும், அஞ்சா நெஞ்சன். இவைகள் எல்லாம் போக, வேண்டியவர்களைக் கண்ணும் கருத்துமாகக் கவனிப்பது. இதை நாங்கள் நேரில் அனுபவித்ததோடு, இப்பேர்ப்பட்டவர்கள் சமுதாய நலத்திற்காகப் பல்லாண்டு பல்லாண்டு வாழவேண்டும். இதற்காக ஆண்டவனை வேண்டிக் கொள்கிறோம். ‘வேண்டிய போதடியர் வேண்டிய போகமது வேண்ட வெருது தரும் பெருமாளே’ என்று அருணகிரி பாடினர். அந்த வேங்கடவனைப் பின்பற்றுகிறது. நமது வள்ளலுடைய மனப்பான்மை !



# என் இனிய நண்பர்

'சாவி'

அழகிய மலரைப் பார்க்கும் போதும், அர்த்தமுள்ள கவிதையைப் படிக்கும் போதும் ஏற்படுகின்ற மகிழ்ச்சி சில மனிதர்களைச் சந்திக்கும்போதும் ஏற்படுவதுண்டு. அப்படிப்பட்ட மனிதர்களில் ஆறுமுகம் பிள்ளை ஒருவர்.

திரு. பிள்ளை அவர்களை எனக்கு அறிமுகப்படுத்தியர் திருமுருக கிருபானந்த வாரியார். "நான் மலேசியா செல்கிறேன். வள்ளல் ஆறுமுகம் பிள்ளைக்கு ஓர் அறிமுகக் கடிதம் கொடுங்கள்" என்று வாரியாரிடம் கேட்டபோது, அவர் ஆறுமுகம் பிள்ளையின் அருமை பெருமைகளை எனக்கு எடுத்துச் சொல்லி அறிமுகக் கடிதமும் எழுதித்தந்தார்.

"பிள்ளையவர்களுக்குப் பினங்கில் கடல் போன்று வீடும், மலைமீது ஒரு பங்களாவும் அதைச் சுற்றி பெரிய ரப்பர் தோட்டமும் உள்ளன. ஒரு முறை நான் பினங்கு போயிருந்தபோது அந்த வள்ளல் பெருந்தகையின் விருந்தினராகத் தங்கினேன். அச்சமயம் அவர் என்னை அந்த மலைக்கு அழைத்துப்போயிருந்தார். மலை உச்சியில் நானும் அவரும் நின்று பேசிக்கொண்டிருந்தபோது, 'இங்கிருந்து எவ்வளவு தூரம் உங்கள் கண்ணுக்குத் தெரிகிறது?" என்று கேட்டார். நான் கையை முழுவதுமாக நீட்டிக் காட்டி, "அதோ தெரிகிறதே தொடுவானம், அது வரை" என்றேன் 'அவ்வளவும் நமது நிலம்தான்' என்றார். நான் பிரமித்துப்போனேன்" என்று கூறினர் வாரியார்.

வாரியாரின் அறிமுகக் கடிதத்துடன் நான் பினங்கு போனபோது பிள்ளையவர்கள் ஊரில் இல்லை. அவருடைய மகன் நாகராஜனும் அங்கே இல்லை. ஆனலும் உபசரிப்பில் எந்தவிதக் குறைவும் இல்லை. வாரியார் குறிப்பிட்ட அந்த மலைக்குப்போய்ப் பார்க்க வேண்டும் என்ற என் விருப்பத்தை வீட்டிலிருந்தவர்களிடம் சொன்னதுதான் தாமதம், உடனே என்னை அழைத்துச் சென்று காட்டினர்கள் மலை பங்களாவில் பிரமாதமான விருந்து வைத்தார்கள். சாப்பிட்ட பின் வெளியே போய் நின்று தோட்டத்தைப் பார்த்தபோது வாரியார் சுவாமிகளும், வள்ளல் ஆறுமுகம் பிள்ளையும் பேசிக்கொண்ட காட்சி கண்முன் வந்து நின்றது.

அதற்குப் பிறகு நான் எப்போது கீழ்த்திசை நாடுகளுக்குப் போனுலும் முதலில் பினங்கு போகாமல் இருப்பதில்லை. பிள்ளையவர்கள் வீட்டில் இரண்டொருநாள் தங்கி அவருடைய விருந்தோம்பல், உரையாடல்களில் மூழ்கித் திளைக்காமலும் இருப்பதில்லை.

எதையும் சிறிதாகவே சிந்திக்கத் தெரியாதவர் பிள்ளையவர்கள். திருப்பத்தூர் வீடாகட்டும், பினங்கு பங்களாவாகட்டும், இரண்டுமே அரண்மனை போலத்தான் இருக்கும். மூலைக்கு மூலை வேலைக்காரர்கள், படகுபோன்ற கார்கள், குதிரைகள் போன்ற நாய்கள் என்று அந்தச் சூழ்நிலையிலேயே ஒரு பிரம்மாண்டத்தை நம்மால் உணர முடியும். எப்போதுமே பட்டு வேட்டி, பட்டு சட்டைதான். கணீரென்ற குரல், தோற்றத்தில் கம்பீரம், பேச்சில் பெருந்தன்மை, சிந்தனையில் தெய்வத் தமிழ். மாடி ஹாலில் ஊதுபத்தியும் சாம்பிராணியும் கற்பூரமும் சந்தனக் கட்டைகளும் அக்னியில் மணக்க, தெய்வப் படங்களின் சாந்நித்யத்தில் ஒரு புனிதச் சூழ்நிலை தெரியும். அந்த

வீட்டில் டைனிங் டேபிளில் ஃபுட்பால் மேட்ச் விளையாடலாம். ஹாலிலுள்ள டி.வி. யும் யானைத் துதிக்கை போன்று பெண்டுலம் வீசி நிற்கும் ஆளுயர கெடிகாரமும், பெரிதாக, அகலமாக இருக்கும். பிள்ளையவர்கள் "சீதே!" என்று அவர் தம் மனைவியை அழைக்கும் குரலில் கூட ஒரு ராஜரீகம் தெரியும். அவரது சிந்தனை பெரிது. செயல், பெரிது. மனம் பெரிது. வாழும் முறையும் பெரிது. வள்ளல் தன்மையும் பெரிது.

ஆறுமுகம் பிள்ளையின் ஆழ்ந்த தமிழ்ப் பற்று அனைவரும் அறிந்ததே. மணிக் கணக்கில் இலக்கிய நயத்தோடு பேசும் ஆற்றல் மிக்கவர். அருட்செல்வர், பழந்தமிழ் இலக்கியங்களிலும் சமய நூல்களிலும், சித்தர் பாடல்களிலும் மிக்க ஈடுபாடு கொண்டவர். அவரோடு உரையாடிக் கொண்டிருப்பது இனியதொரு அனுபவம். இரவு நெடுநேரம் வரை கண்விழித்துத் தம்முடைய அனுபவங்கள் நிறைந்த வாழ்க்கைக் கதையை என்னிடம் சொல்லியிருக்கிறார். பெரிய பெரிய சோதனைகளையும் எதிர்ப்புகளையும் சமாளித்து வெற்றி கண்டிருக்கிறார். தமக்கு நேர்ந்த அனுபவங்களை, பயங்கரங்களை விவரித்திருக்கிறார். மலை குலைந்தாலும் நிலை குலையாத உறுதி படைத்த நெஞ்சம் கொண்டவர். ஒரு சாமான்யனாக வாழ்க்கையை ஆரம்பித்து இடைவிடாத உழைப்பாலும் சாகஸங்களாலும் ஒரு சாம்ராஜ்யத்தையே தன்னைச் சுற்றிச் சமைத்திருக்கும் அவரை ஒரு சாதனையாளராகவே நான் கருதுகிறேன்.

சமீப காலமாக ஆன்மீக விஷயங்களில் ஆறுமுகம் பிள்ளையவர்களின் மனம் அதிகம் லயித்திருக்கிறது. ஆலயங்களிலும் ஆஸ்திக அமைப்புகளிலும் பிள்ளையவர்களின் ஈடுபாடு அதிகம். அது வெறும் ஈடுபாடு அல்ல. பல லட்சங்களை அள்ளிக் கொடுத்துள்ள ஈடுபாடு.

தினமணி என்ற தினப்பத்திரிகையை மலேசியாவில் மிகவும் வெற்றிகரமாக நடத்தி வருகிறார் பல வண்ணப் பக்கங்களையும், பல்வேறு செய்திகளையும் கொண்டு மிளிரும் தினமணி இன்று ஒரு முதல் தர தமிழ் நாளேடாக மலேசிய நாட்டில் பவனி வருகிறது

இரண்டொரு ஆண்டுகளுக்கு முன்பு அவர் காலில் ஏற்பட்ட உபாதை காரணமாக வேலூர் கிறிஸ்தவக் கல்லூரி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்தபோது நானும் எனது நண்பர் ராணிமைந்தனும் அவரைப் பார்க்கப்போயிருந்தோம். முதல் முதலில், பினாங்கில் அவரைப்போய்ப் பார்த்தபோது எப்படிப் பழகினாரோ அதே பாசத்தோடும் பரிவோடும் உள்ளன்போடும் பேசிக் கொண்டிருந்தார்.

மலேசியாவில் ஆறுமுகம் பிள்ளையின் செல்வாக்கும் புகழும் வானளவுக்கு உயர்ந்து நிற்கிறது. அமைச்சர்கள் மட்டுமல்ல, அரச குடும்பத்தினரும் ஆறுமுகம் பிள்ளையுடன் நெருக்கமான நட்பு கொண்டிருக்கிறார்கள், மன்னர் குடும்பத்தோடு இவருக்குள்ள நெருக்கம் பற்றி இவர் வீட்டிலுள்ள புகைப் படங்களே சான்று கூறும்.

சில மாதங்களுக்கு முன் நான் பினாங்கு போயிருந்தபோது எழுத்தாளர் நண்பர் திரு புஷ்பா தங்கதுரையையும் உடன் அழைத்துப் போயிருந்தேன். மிகுந்த உற்சாகத்தோடு எங்களை அவர் வரவேற்று விருந்து படைத்து, அன்று இரவு நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார். பயண அலுப்பு காரணமாக எனக்குத் தூக்கம் வரவே, நான் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு மாடிக்குத் தூங்கப் போய் விட்டேன். விடியற் காலை எழுந்து பார்த்த

போது பிள்ளையவர்கள் புஷ்பா தங்கதுரையோடு பேசிக் கொண்டிருப்பது காதில் விழுந்தது.

வள்ளல் ஆறுமுகம் பிள்ளைக்குச் சொந்தமான எத்தனையோ தர்ம ஸ்தாபனங்களும், கோயில்களும் கல்விக் கூடங்களும் உண்டு. இவற்றில் நான் பெரிதும் போற்றுவது ராமநாதபுரம் திருப்பத்தூரில் உள்ள ஆறுமுகம்பிள்ளைசீதையம்மாள் கல்லூரிதான். அக்கல்லூரி இயக்கத்தில் பேராசிரியர் பா. நமசிவாயம் (வழக்காடு மன்றப் புகழ்), எழுத்தாளர் 'அய்க்கண்' போன்ற இலக்கியவாதிகளைப் பங்கு கொள்ளச் செய்திருப்பதிலிருந்தே எழுத்தாளர்களிடம் இவருக்குள்ள அன்பும் மதிப்பும் எத்தகையது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

கோலாலம்பூரில் மலேசிய எழுத்தாளர் மாநாடு ஒன்றில் நான் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்ட போது திரு ஆறுமுகம் பிள்ளை அந்த நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிப் பேசினர். தம் பேச்சுக் கிடையில் என் எழுத்துத் திறமையைப் பாராட்டி தங்கத்தால் ஆன பார்க்கர் பேனு ஒன்றைப் பரிசாகவும் தந்தார்.

பிள்ளையவர்களின் பவள விழாவை ஒரு தனிமனிதனின் விழாவாக நான் கருதவில்லை. உழைப்புக்கு, அதன் வெற்றிக்கு, வள்ளல் தன்மைக்கு, நேர்மைக்கு, தார்மிகத்துக்கு, நெறி தவருத வாழ்க்கைக்கு எடுக்கப்படும் விழாவாகவே கருதுகிறேன்.

பவளவிழா காணும் ஆறுமுகம் பிள்ளையவர்கள் எவ்வளவோ பொருட் செல்வத்தைப் பல அரும்பெரும் பணிகளுக்கு வர்ரி வழங்கியிருக்கிருர். இவர் பெருவாழ்வு வாழ்ந்து நூருண்டு காண ஆண்டவன் அருள் பாலிக்க வேண்டுகிறேன்.



---

வள்ளல் வாக்கு ✲ வள்ளல் வாக்கு ✲ வள்ளல் வாக்கு

---

பிராணன் என்பதும், பிராணி என்பதும் ஒன்றுதான். சாண் பிராணி, சாம்பிராணி, சாண்பிராணனை நமக்குச் சாம்பிராணியாக ஆண்டவனை வழிபடுவதற்குத் தூபக்கால் நெருப்பில்போட்டு அதை சுவாமிக்கு எடுத்துத் தூபம் காட்டிவைத்திருக்கிருர்கள்.

— 'கணேசர் தத்துவ விளக்கம்' - அருட்பெரும் வள்ளல்

---

வள்ளல் வாக்கு ✲ வள்ளல் வாக்கு ✲ வள்ளல் வாக்கு

---

# தமிழரிடையே ஒரு 'வான் டெரிகன்'

புஷ்பா தங்கதுரை

பினங்கு சென்றது முதல் தடவை.

விமான நிலையத்திலிருந்து பச்சை சூழ்ந்த சாலை!

கார் புதிய ஜப்பானியத் தயாரிப்பு.

ஓசையில்லாமல் வழுவல்!

எனக்கு எல்லாம் பிரமிப்பு! அயல் மண்ணில் முதலாகக் கால் அடி வைக்கிறேன்.

வெயில் தெரியாத மென்மையான வெளிச்சம். ஆகாயமெல்லாம் மேகம். இரு பக்கமும் ஓடும் அடர்த்தியான ட்ராபிகல் செழிப்பு.

பினங்கு தன் முதல் நுனியைக் காண்பிக்கிறது. சாலைகள் வெட்டுகின்றன. கட்டிடங்கள் மெள்ளத் தளும்புகின்றன.

கார் பல வளைவுகளில், குறுக்குகளில் போய் அந்தப் பங்களாவில் நுழைந்து போர்டிகோவில் நிற்கிறது. கதவைத் திறந்து, இறங்குகிறேன். அடுத்து திரு. சாவி இறங்குகிருர். ஐந்தாறு வட்டமான அல்சேஷியன்கள் நிசப்தமாக எங்களை வளைய வருகின்றன.

உள்ளே முகப்பைப் பார்க்கிறேன்.

ஒரே புகை மயமாக இருக்கிறது.

பிறகு முகர்ந்தால் அது சாம்பிராணிப் புகை என்று தெரிகிறது.

அந்தப் புகையிலிருந்து உற்பத்தியானவர் போல் ஒருவர் வருகிருர்.

ஸார், யாரே வராங்க! என்கிறேன்.

வருகிறவர்,—வாங்க! வாங்க! என்று முகம் மலர வரவேற்கிருர்.

ஜரிகைக் கரை வேட்டி. மேலே ஒரு ஜிப்பா வகை! தோளில் நீள அங்கவஸ்திரம். முகத்தில் மாருத புன்னகை.

—இவர்தான் திரு ஆறுமுகம்பிள்ளை என்ருர் திரு சாவி.

திகைத்துப் பார்த்தேன். பிரித்த முறுவல் ஒரு மாற்று கூடக் குறையவில்லை. முறுவலுக்குள் அவர் முகமெல்லாம் மூழ்கி இருந்தது.

சாவியை வரவேற்ருர்.

அடுத்து என் கைகளைப் பற்றி, —இத்தனை நாளும் அகப்படாதவர் அகப்பட்டார் என்ருர்

எனக்குள் அந்த வாக்கியம் ஒரு மின் சொடுக்குப் போல ஓடியது.

ஏதாவது சொல்லக் கூட இல்லை. திரும்பத் திரும்ப அவரைப் பார்த்தேன்.

அதாவது நான் கொஞ்சம் சமய நினைவுகள் உள்ளவன்.

முக்கியமாக சொல்லுக்கு நிறைய சக்தி உண்டு என்பதைப் புரிந்து கொண்டவன்.

சரியானவர் வாயால் சரியான நேரத்தில் சரியானவர் காதில் விழும்போது சொல் வெறும் சொல்லாக இருப்பதில்லை. செயலாகவே விளைந்து விடுகிறது.

இங்கே நான் கேட்ட வாக்கியம் எனக்கு மனதுள் நெருடலை ஏற்படுத்த, திரு. ஆறுமுகம் பிள்ளையை நான் கணிக்கப் பார்த்தேன்.

அவரைப் பற்றி நிறையக் கேள்விப் பட்டிருக்கிறேனே தவிர அவரது சமயப்பற்று பற்றி எனக்கு எதுவும் தெரியாது

எனவே ஏதோ ஒரு வாக்கியத்தைச் சொல்லிவிட்டால், அதில் நிறைய அர்த்தத்தைத் தோண்டி எடுக்க வேண்டாம் என்று விட்டுவிட்டேன்.

மாடியில் எங்களுக்கு அறை!

போய் உடை மாற்றி வெளியே ஒரு உலா போய் இரவு எட்டுக்குத் திரும்பி வந்தோம்.

முன் ஹால் சோபாவில் ஆறுமுகம் பிள்ளை அவர்கள் அதே மந்தகாசமாய் இருந்தார்.

அவர் பக்கத்தில் உட்கார்ந்து பேச ஆரம்பித்தோம்.

முதலில் லௌகீகத்திலிருந்து தத்துவத் திற்குப் போனது.

இரண்டு மூன்று முறை பிள்ளை அவர்கள் நாவில் திருமூலர் வந்து போனார்.

அப்புறம் போகப் போக எனக்கு மெய் சிலிர்க்க ஆரம்பித்தது!

தத்துவம், புராணம், மேற்கோள் என்று ஒரு உபன்யாசிக்கு எவ்வளவு தெரிந்திருக்க வேண்டுமோ அத்தனையும் எடுத்துப் பொழிந் தார் அவர்.

எனக்கு அம்மாதிரிச் சந்திப்புகள் அபூர்வ மாக நிகழ்வதுண்டு.

அதுவும் காலம் போகப் போக அது அருகிக் கொண்டே போவதைக் கவனித்திருக்கிறேன்.

இந்த நிலையில் முற்றும் எதிர்பாராத இடத் திலும் நேரத்திலும் எனக்கு அந்த ஆத்ம சந்திப்பு கிடைத்ததும் மிக்க மகிழ்ச்சி அடைந் தேன்.

அந்த ருசி என்னை வெகுவாக இழுத்துவிட, நான் பிள்ளை அவர்களிடம் பேசிக்கொண்டே போனேன்.

களைப்பினால் தூக்கவசத்தில் இருந்த திரு.சாலிகூட விடை பெற்றுப் போய்விட்டார். நானும் பிள்ளை அவர்களும் இரவெல்லாம் பேசிக் கொண்டிருந்தோம்.

அப்போதுதான் அவரிடம் சில ரத்னச்சுருக் கமான வாக்கியங்கள் தாமாக வரக்கண் டேன். அவைகள் சூத்திரங்கள் மாதிரி. அவற்றை அவர் நினைத்துச் சொல்வதில்லை. தாமாகவே வருகின்றன.

தத்துவப் பேச்சு வெறும் பண்டிதத்தனத்தில் இல்லாமல் மனத்தைத் தொடும் கவிதைப் பேச்சாகவே இருந்தால் அதைச் சொல்பவர் தத்துவத் துறையில் முன்னேறியிருக்கிறார் என்று அர்த்தம்.

பிள்ளைகளிடம் அந்தக் கவிதைப் பேச்சு இருந்தது. ஏனெனில் சொல்வது ரஸமாகவே விழுந்தது. அதில் ஒரு அனுபவ நேர்மை பளிச்சென்று வெளிச்சம் அடித்தது.

சொல்லப் போனால் மகான்களிடம்தான் இத்தகைய பேச்சுக்கள் வருவதற்கு சந்தர்ப் பம் உண்டு.

ராமகிருஷ்ணரையோ, வள்ளுவரையோ எடுத்துப் பாருங்கள். பேச்சே கவிதையாக இருக்கும்.

திரு. பிள்ளை அவர்கள் பேச்சில் இதைக் கண்டவுடன் நான் பெரும் மகிழ்ச்சி அடைந் தேன்.

அபூர்வமாக இங்கே ஒரு மனிதர் இருக் கிறார் என்று நினைத்தேன்.

அது மட்டுமல்ல.

பிள்ளை அவர்கள் 'வான் டெரிகன்' சாயை லிலும் பல விஷயங்கள் கூறுகிறார்.

டெரிகன் பற்பல Terrestrial Beings பற்றிப் பேசுபவர்.

பிள்ளை அவர்களும் திருப்பத்தூரில் வால் மீகி பிறந்திருக்க வேண்டும் என்று கூறிச் சான்றுகள் கொடுக்கும்போது அயர்ந்து விடுகிறோம்.

இது போன்ற விசேஷ ஆராய்ச்சி ஒன்று இரண்டா ... எத்தனையோ?

நடுநிசி தாண்டி வெகுநேரம் அளவளாவிய பின்தான் அன்று படுக்கப்போனேன். ஒரு புனிதத் தலத்திற்கு யாத்திரை போய்விட்டு வந்த நிறைவு மனத்தில் கிடைத்தது. வாழ்க பிள்ளை அவர்கள்!



# பார் புகழும் வள்ளலுக்குப் பவள விழா !

த. நாகராசன், பி எஸ்சி.,
அறநிலையத்துறை உதவி ஆணையர்

அரிய பண்பு, ஆழ்ந்த இறைப்பற்று, இனிய நட்பு, ஈகைத் தன்மை இத்தனையும் சேர்ந்த மொத்த உருவம்தான் திருப்புத்தூர் திருவாளர் ஆறுமுகம் பிள்ளை. அருள்மாமணி ஆறுமுகம் பிள்ளை அவர்கள், ஊரறிந்த உத்தமர். பாரறிந்த வள்ளல், பண்புச் செல்வர். பழியஞ்சும் பண்பாளர், பல்லார் பயன்பெறும் பழமரம் போல, காலையும், மாலையும் வருவோர் போவோர்க் கெல்லாம் வாட்டம் தவிர்த்திடும் சாலைமரம் போல வாழ்ந்து வருபவர். செல்வத்தின் முகட்டிலே அமர்ந்திருந்தாலும் ஆறுபோல அனைவர்க்கும் உதவும் தன்மை பெற்றவர். கடல்போலப் பரந்த உள்ளம். எத்தனையோ பேரை வாழ்வின் ஏற்றத்தில் ஏற்றி மகிழ்ந்திட்ட புண்ணிய ஏணி !

அன்பர்களிடம் அந்தமிலா அன்புடையவர் ! அறம் திறம்பாத வாழ்க்கை, அருள் சிறக்கும் வாழ்க்கையினை அளப்பரும் பெருமையோடு வாழ்ந்து வந்தாலும் அவரது வளப்பரும் வாழ்வை அறப்பணிகளுக்கே அர்ப்பணித்து வருபவர். செல்வச் செருக்கில்லாதவர், பல்வேறு ஊர்களில் பல்லறம் புரிந்தவர். பாசம் மிகுந்தவர். நேரம் தவறாமல் கடமையைச் செய்பவர். ஈரம் உள்ள மனத்தினர்; இறை உணர்வு மிக்கவர்.

ஊக்கத்தை நெஞ்சிலே தேக்கி, உழைப்பினை வாழ்வில் ஏத்தி, தூக்கத்தை விரட்டி, ஆக்கத்தைப் பெற்றுச்சளைக்காமல், சலிக்காமல் எதிர்ப்பட்ட எதிர்ப்புகளை வாழ்க்கைத் தோட்டத்தின் எருவாக்கும் சாதனை செய்து சரித்திரம் படைத்தவர். குலம் சிறக்க, குடி சிறக்க, கொண்ட தொழில் சிறக்க, நாடு, மொழி, நன்மக்கட் தொண்டாற்றி நானிலம் மெச்ச வாழ்ந்து வருபவர்,

தருமம் கொடுத்த அவரது தாராள மனத்தைத் திருப்புத்தூரில் உள்ள ஆறுமுகம் பிள்ளை - சீதைஅம்மாள் கல்லூரி அழகில் மட்டுமல்ல, திருப்புத்தூர் 'பூமாயி' அம்மன் கோயிலிலும், சென்னையிலுள்ள அருள்தரும் காளிகாம்பாள் கோயிலிலும், பினாங்கில், பட்டர்வொர்த்தில் சுங்குரும்பையில் உள்ள மங்கள நாயகி அம்மன் கோயிலிலும் மற்றும் அவரால் கட்டப்பெற்ற திருமண மண்டபங்களிலும் காணலாம். ''கற்காமல் இருப்பதை விட ஒருவன் பிறக்காமல் இருப்பது மேல். ஏனென்றால் ஒருவனின் அறியாமைதான் சகலவிதமான துன்பத்திற்கு அடிப்படையாக அமைவது'' என்ற ''பிளேட்டோ'' வின் கூற்றுக் கொப்ப அறிவின் முன்னே அறியாமை தலை வணங்கக் கல்விக்கும், கலைகளுக்கும் கணக்கின்றிச் செய்தவர்.

'' நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம் '' என்றார் பாவேந்தர் பாரதிதாசன்.

'' ஒரு மகிழ்ச்சியான குடும்பம் நம் கண்முன்னே நாம் காணும் சொர்க்கம் '' என்றார் '' ஜான்புரௌவுன் '.

நல்லதொரு குடும்பம் ஒரு நல்ல சமுதாயத்தைப் போன்றது. குடும்பத்தில் குதூகலம் நிலவி, கட்டுக்கோப்பான அமைதி தவழுமானால் அந்தச் குடும்பம் சமுதாயத்

துக்குப் பல பெருமைகளைச் சுரந்திடும் ஊற்றாக, நல்ல வளங்களை விளைத்திடும் நாற்றாக விளங்கும். ஓர் குடும்பச் சீர் குலைப்பின்னால் ஒரு நாட்டின் சீர்மையும் (Harmony) சீர்குலையும். அதனால்தான் அமெரிக்க கல்வியாளர் ஃபெலிக்ஸ் அட்லா (Felix Adler)

'THE FAMILY IS THE MINIATURE OF COMMON-WEALTH UPON WHOSE INTEGRITY THE SAFETY OF THE LARGER COMMON WEALTH DEPENDS'

என்று கூறியுள்ளார். அருள்மாமணியின் அருமந்த புதல்வர்களான திருவாளர்கள் நாகராஜன், தங்கவேலு ஆகிய இருவரும் அவரது இருகண்கள். அவர்களிருவருக்கும் கண்ணியமே கண்கவர் அணிகலன்! நேர்மையே அவர்களது கவசம்! மனச்சாட்சியே அவர்களது அழகைக்காட்டும் அரண்!! வாழ்வில் அவர்கள் கடைப்பிடிக்கும் நன்னெறி அவர்களது தகுதியை அளக்கும் கருவி.

"வறுமை வயப்பட்டோர் தம் அறிவையும் இழப்பர். அழகிய குணம் அனைத்தையும் இழப்பர்" என்பது 'நாலடியார்' நல்லுரை.

"மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே"

என்று சீத்தலைச் சாத்தனார் கூறியபடி உடம்புள் தங்கிய உயிரைக் காத்து ஓம்புதற்கு உற்ற மருந்தாய் உதவும் உணவை, பசிப்பவர்க்கு இட்டு உண்ணும் பரம தயாளர் திருவாளர் பிள்ளை அவர்கள். பசிப்பிணி அறுக்கும் அன்னதானப் பணியை அவர் ஆருயிர் மருந்தாகக் கொண்டவர்.

செல்வத்தைத் தேடிக் குவித்து வைப்பதால் மட்டும் ஒருவருக்குப் பேரும், பெருமையும் வந்து சேருவதில்லை. உதய சூரியனது பெருமை அது இருக்கும் உயரத்துக்காகவா? அல்ல; அல்ல. உயிர் அணுக்களுக்கும், மனித சமுதாயத்துக்கும் சூரிய ஒளியால் கிடைக்கும் ஒப்பற்ற பயன்களால்தான்! ஒருவரது வாழ்வு அவர் வாழ்ந்து அழிந்த ஆண்டுகளைக் கொண்டு அளக்கப்படுவதில்லை. அவர் ஆற்றிச்சென்ற அறப்பணிகள், அறஞ்செயல்களைக்கொண்டே கணக்கிடப்படுகின்றன.

"RICHES WITHOUT CHARITY ARE NOTHING WORTH"

என்ற ஹென்ரி ஃபீல்டிங் (Henry Fielding) கூற்றுக்கொப்ப நச்சப்படாதவர் செல்வம் நடு ஊரில் உள்ள நச்சுமரம் போன்றது யாருக்கும் பயன்படாதது.

சொத்தின் பெருமை அவற்றைப் பத்திரமாகச் சேமித்து வைப்பதில் இல்லை. தாராளமாகச் செலவு செய்வதிலும் இல்லை. விவேகமான வழியில் சமுதாய நன்மைக்காகச் செய்யப்படும் அறப்பணிகளில்தான் உள்ளது. ஒருவன் காலமாகி விட்டால் மனிதன் கேட்கும் கேள்வி "அவன் எவ்வளவு சொத்து சேமித்து வைத்துச் சென்றுள்ளான்?" என்பதுதான். ஆனால் தேவ தூதர்களோ "அவன் இறக்குமுன் செய்த அறப்பணிகள், நல்ல செயல்கள் என்னென்ன?" என்பதுதான்.

"நாம் செய்யும் வழிபாடு இறைவன் உறையும் இடத்துக்குப் பாதிவழிவரைதான் அழைத்துச் செல்லும். நோன்பும் விரதமும் அவன் உறையும் கதவுவரை கொண்டு செல்லும். நாம் செய்யும் தருமமோ இறைவனிடத்தில் நேரடியாகவே இட்டுச் செல்லும்" என்பது 'குரான்' கூறும் வாசகம். இதனைப் பூரணமாக உணர்ந்தவர் உயர்திரு. பிள்ளை அவர்கள்.

நல்ல அறப்பணிகளுக்கு என்றும் அழிவில்லை. எவ்வளவுக்கு எவ்வளவு அறம்புரிகிறோமோ அவ்வளவுக்கு அகத்தில் அமைதி அரும்பும்.

SURPLUS WEALTH IS A SACRED TRUST WHICH ITS POSSESSOR, IS BOUND TO ADMINISTER IN HIS LIFE — TIME FOR THE GOOD OF THE COMMUNITY — ANDREW CORNEDI

"உபரியாக உள்ள செல்வம் ஒரு புனிதமான அறச்சொத்து. அதனை வைத்திருப்பவர் அவரது வாழ்நாளில் சமுதாய நன்மைக்காகச் செலவிடவேண்டும்" என்ற உன்னதக் கொள்கையை உறுதியாகக் கடைப்பிடித்து வருபவர் பிள்ளை அவர்கள்.

"அறத்தினூங்கு ஆக்கம் எவனோ உயிர்க்கு" என்ற வள்ளுவர் வாக்குக் கொப்ப தருமத்தைக் காட்டிலும் சிறந்த பொக்கிஷம் எதுமில்லை.

பொன்றுங்கால் பொன்றாத் துணையாக உள்ள தருமத்தை, மாயப்பிறப்பறுக்கும் தருமத்தை, வாழ்நாள் வழியடைக்கும் கல்லான தருமத்தை நித்திய நியமமாகக்கொண்டு நல்லன ஆற்றி, நலம்பல செய்து நானிலம் புகழ நயம்பட வாழும் ஆன்மீக வள்ளல் ஆறுமுகம் பிள்ளை — சீதையம்மாள் அவர்களின் குடும்பத்தார் ஆயிரம் பிறைகண்டு

வீசும் புகழொடு வெகுகாலம் வாழவும்
பல்லாண்டு சுகித்திருக்க பரமன் அருளவும்
பேறாயிரம் பெற்றுப் பெருவாழ்வு வாழவும்

நந்தூர் அலைவாயில் செந்தூர் கந்தவேளின் சேவடியைத் தொழுகிறேன்.

"வாழ்க எல்லா வளங்களும் நலங்களும்
சூழ்க ஆயுளும் சுகமும் — இனிதே
சூழ்கதிர் மதியுளவரை தொலையாச் செல்வம்,
வாழ்க பல்லூழி வாழ்க செவ்விதினே"



# ஞானவள்ளல்

பெரும்புலவர் - பேராசிரியர் பா. நமசிவாயம்,
தமிழ்த்துறைத் தலைவர்,
ஆறுமுகம் பிள்ளை-சீதையம்மாள் கல்லூரி

இலக்கியங்களிலே வள்ளல்களைப் பற்றி விரிவாகப் படித்தேன். பாரியையும் காரியையும் பழந்தமிழ்ப் புலவர்கள் பாராட்டிப் புகழ்ந்துள்ள வரிகளையெல்லாம் இளமையில் மனப்பாடம் செய்து ஒப்பித்து உருகுவேன். ஓதி மகிழ்வேன்.

என்றாலும் என் மாணவப் பருவத்தில் ஒரு வள்ளலை நான் கண்ணால் பார்த்ததில்லை. எல்லாம் ஏட்டுச்சுரைக்காய்தான்.

படிப்பை முடித்தவுடன் ஆசிரியரானேன். மீண்டும் வகுப்பறைகளில் வள்ளல்களைப்பற்றிப் பேசினேன். பதவுரை பொழிப்புரை நயவுரை சொன்னேன். தேர்வுகள் வைத்தேன். மதிப்பெண்களை வழங்கினேன்.

இன்னும் நான் ஒரு வள்ளலைப் பார்க்கவில்லை... நான் கற்ற கல்வி என்னையும் வள்ளலாக்கவில்லை. என் மாணுக்கர்களை ஆக்கியிருக்கும் என்று நான் நம்பவில்லை... அப்படி யாராவது ஆகியிருந்தால் அது என்னால் இல்லை.

ஏட்டிலேயே — இலக்கியத்திலேயே வள்ளல்கள் வருவார்கள் — போவார்கள். நாட்டிலே நம் கண்ணெதிரே ஒரு வள்ளல் வருவாரா ? நாம் பார்த்து மகிழமுடியுமா ? — ஏங்கினேன்...

நானும் எனது முன்னோர்களும் பழம் பிறவிகளிலே செய்த தவத்தின் பயனாக என் கனவு இருபது ஆண்டுகளுக்கு முன் நனவாகியது.

ஆம்! முதன்முதலில் 1965-அம் ஆண்டு வள்ளல் அவர்களுக்கு முன்னே என்னைக் கொண்டு நிறுத்தியவர் வள்ளல் அவர்களின் மூத்த திருமகனார் உயர்திரு. நா. ஆறு. நாகராசன் அவர்கள். குருவுக்கே குருவைக் காட்டிய புண்ணியவான். வள்ளலைக் காண ஆசைப்பட்ட எனக்கு ஞான வள்ளலைக் காட்டிவிட்டார்.

ஏழைகளின் கண்ணீரைத் துடைக்கும் கருணையாளரை, அறியாமை இருளகற்றும் ஒளிவிளக்கினை, பசிப்பிணி போக்கும் பசிப்பிணி மருத்துவரை, நடமாடும் பாரி வள்ளலை அருள்மாமணி அவர்களை "ஆறுமுகம் மாளிகை"யில் ஆசை தீரப்பார்த்தேன்.

காகிதத்திலே அச்சிலே மட்டும் இதுவரை படித்து அறிந்திருந்த வள்ளல் இப்பொழுதுதான் என் கண்ணெதிரே காட்சி தந்தார்கள். வள்ளலைக் கண்டேன். நான் இதற்கு முன் கண்டறியாத காட்சி.

திருநீறு திகழ்ந்த நெற்றியில் செக்கச் சிவந்த குங்குமம். காண்பவர்களைக் கவர்ந்திழுக்கும் ஏதோ ஒரு காந்த சக்தி. உள்ளத்தைச் சுண்டியிழுத்து ஆனந்த வெள்ளத் தழுத்தும் மோகனப் புன்னகை.

ஒரு சில வார்த்தைகள் பேசினுர்கள். விடை பெற்றேன். அப்பொழுது நான் அழகப்பா கல்லூரியில் தமிழாசிரியன்,

இதற்கு இரண்டு மாதத்துக்குப் பிறகு வள்ளல் அவர்களின் கல்லூரியில் பணியாற்றும் பேறுகிட்டியது. பலமுறை வள்ளலைக் காணும் வாய்ப்புக் கிடைத்தது. அவர்களைக் காண்பதும் பேசுவதும் எனக்குப் பேரின்பத்தைத்தரும். பெரிய செய்திகளைத்தான் பேசுவார்கள். திருமூலரும் திருவள்ளுவரும் திருநாவுக்கரசரும் அகத்தியரும் வள்ளலாரும், கம்பரும் வள்ளலின் உரையாடலிலே வந்து வந்து போவார்கள். அருட் செல்வத்தை இந்தப் பொருட் செல்வரிடம் ஆண்டவன் வாரிவழங்கியிருக்கிருன். அதிலும் திருமூலரிடம் வள்ளலுக்கு அபார பக்தி...

சில மாதங்களுக்கு முன்பு—சிறிது உடல் நலமின்றியிருந்த வள்ளல் அவர்களைப் பார்க்கச் சென்றிருந்தேன். யாரும் அதிக நேரம் பேசி வள்ளல் அவர்களுக்குத் தொல்லை தந்துவிடுவார்களோ என்று கருதி, அவர்களிடம் செல்பவர்களை விரைவில் வெளியே அனுப்பப் பணியாட்கள் சுற்றி நின்ருர்கள். நான் வள்ளல் அவர்களின் அருகில் சென்று ''ஐயா! நலமாக இருக்கிறீர்களா? நன்ருகக் குணமடைந்து வருகிறீர்கள்'' என்றேன். ''நமச்சிவாயமா? இப்படி உட்காருங்கள்'' என்று வள்ளல் கூறினுர்கள். வெளியே இரண்டு அன்பர்கள் என்னைப் பார்த்த பார்வையில் மெல்ல நகர்ந்தேன். ''இப்படி உட்காருங்கள்'' என்று மீண்டும் வள்ளல் உரத்த குரலில் சொன்னவுடன் உட்கார்ந்தேன். மெல்லப் பேசினேன். ''ஐயா! உங்களை இந்த நேரத்தில் நான் நீண்ட நேரம் பேசித் தொந்தரவு தர விரும்பவில்லை. தாங்கள் துன்பப்படுமாறு நான் உங்களைச் சிரமப்படுத்தக் கூடாது. பிறகு ஒருநாள் சாவகாசமாகப் பேசலாம்'' என்றேன்... ''இது என்ன சிரமம்? அப்பர் பெருமான் படாத துயரத்தையா நான் பட்டுவிட்டேன்? திருநாவுக்கரசரை அந்தப் பல்லவ மன்னன் என்ன பாடுபடுத்தினுன்? கல்லிலே கட்டிக் கடலில் தள்ளினுன். அதுசரி! அந்தச் சமயத்தில் திருநாவுக்கரசர் பாடிய 'சொற்றுணை வேதியன்' என்ற பாடலைப் பாடுங்கள்'' என்று எனக்கு ஆணையிட்டார்கள்.

நான் பாடினேன். தனது துன்பத்தைப் பற்றிச் சிறிதும் எண்ணிப் பார்க்காமல் திருநாவுக்கரசரின் துன்பத்துக்காகக் கண்ணீர் விட்டார்கள். பாடிய எனக்குக் கண்ணீரும் வரவில்லை. மனம் கசியவுமில்லை நான் என்ன அருட்செல்வரா?

உத்தரகோசமங்கைக்கு வள்ளல் அவர்களின் படகுக்கார் பறந்து கொண்டிருக்கிறது. வள்ளல் அவர்களும் அன்னை திருமதி சீதையம்மாள் அவர்களும் பின் இருக்கையில் அமர்ந்திருக்கிருர்கள். நான் முன்னே இருக்கிறேன்.

''நமசிவாயம்! இந்த உத்தரகோசமங்கைத் திருக்கோவிலில் உள்ள இலந்தை மரத்தைப் பார்த்திருக்கிறீர்களா?''

''பார்த்திருக்கிறேன்''

''அந்த மரத்துக்கு என்ன வயதிருக்கும் என்று எண்ணுகிறீர்கள்? மாணிக்கவாசகர் உத்தரகோசமங்கையைப் பற்றிப் பாடியுள்ள பாடல்களைச் சொல்ல முடியுமா? மாணிக்கவாசகருக்குத்தான் இந்த உத்தரகோசமங்கைத் தலத்தின் மேல் என்ன பக்தி!''

எனக்குச் சொல்ல ஆசை. என்ருலும் அம்மையார் அவர்கள் வள்ளல் சிறிது ஓய்வு பெறுவது நலமெனக் கருதுவதுபோல எனக்குத் தோன்றியது. நான் நினைத்தது

சரியாகப் போய்விட்டது. வள்ளலைப் பார்த்து அம்மையார் சொன்னார்கள். "இரண்டு தினங்களாக நீங்கள் சரியாகத் தூங்கவில்லை. இன்றும் இரவு முழுவதும் விழித்திருக்க வேண்டும். கொஞ்சம் கண்ணை மூடித்தூங்கினால் என்ன?"

வள்ளல் அவர்கள் இந்த இடத்தில் என்னைப் பார்த்தார்கள். அது அர்த்தமுள்ள பார்வை. பிறகு அன்னை சீதை அம்மாள் அவர்களைப் பார்த்து "நான் இப்பொழுது பயனுள்ள மிகப்பெரிய புண்ணியச் செயலைத்தான் செய்துகொண்டு வருகிறேன். இறைவனைப் பற்றிப் பேசுவதைக்காட்டிலும் எனக்கு எந்த வேலையிலும் இன்பமில்லை. "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" — எவ்வளவு பெரிய மகான் திருநாவுக்கரசர்? நமசிவாயம்! அப்பர் சுவாமிகள் 'அரியானை அந்தணர்தம் சிந்தையானை' எனத் தொடங்கும் திருப்பாடலில் என்ன சொல்லியிருக்கிறார்?"—என்னைப்பார்த்துக்கேட்டார்கள்.

"பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!" என்றேன் நான். என் உள்மனம் "வள்ளலைப் பற்றிப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்று எனக்கு ஆணை தருவது போல உணர்ந்தேன்.

கார் உத்தரகோசமங்கையை நெருங்கிக் கொண்டிருந்தது. "உத்தரகோச மங்கையைப் பற்றி மணிவாசகப் பெருமான் அருளியுள்ள பாடல்களைக் கேட்டேனே? சொல்லுங்கள் ஐயா" என்றார்கள் ஞானவள்ளல்.

நான் மெல்லச் சொல்லிக்கொண்டு வந்தேன். வள்ளல் அவர்கள் இமைகளை மூடிய நிலையிலிருந்ததைக் கண்ட நான் உறங்கிப்போய் விட்டார்கள் என்று கருதிப் பேசாமலிருந்தேன்.

"அது சரி! நீத்தல் விண்ணப்பத்தை ஏன் சொல்ல மறந்துவிட்டீர்கள்?" இமைகளைத் திறந்து இமைப்பொழுதும் என் நெஞ்சைவிட்டு நீங்காத வள்ளல் கேட்டார்கள். 'கடையவனேனைக் கருணையினால் கலந்து ஆண்டு கொண்ட' அருட்பெரு வள்ளல் உறங்கவில்லை. சிந்திக்கிறார்கள் என்பது அப்பொழுதுதான் எனக்குப்புரிந்தது.

வணக்கத்துக்குரிய அம்மா, இதையெல்லாம் பார்த்தார்கள். "சொன்னால் கேட்க மாட்டீர்கள். சரி சரி எப்படியும் போங்கள்" என்று சொல்லிய காட்சி அப்படியே இன்றும் என் கண்முன் நிற்கிறது.

ஞானத்தின் திருவுருவமாக—சமுதாய உயர்வுக்கு வழிகாட்டி அள்ளி வழங்கும் வள்ளலாக—என்னையும் ஆண்டு கொண்டு இன்னருள் புரியும் அருள்மாமணி அவர்கள் ஞான வள்ளலாக, அருட்செல்வராகக் கல்விப் பயிர் வளர்க்கும் அறிவுக்கொண்டலாக வரலாற்றுப் புகழ் பெற்று விட்டார்கள். ஈரநெஞ்சத்தால் கொடைப் பண்பால், விருந்தோம்பும் சீலத்தால், பக்திப் பெருக்கால், சிந்தனை வளத்தால், செயல் வீரத்தால் இன்று அவர்கள் இமயமென நிமிர்ந்து நிற்கிறார்கள். அரும்பாடுபட்டு ஈட்டிய செல்வத்தை ஊருக்கு வழங்கியதால் உயர்ந்து நிற்கிறார்கள். 'செல்வத்துப் பயனே ஈதல்' என்ற தமிழ் நெறி உணர்ந்து வழங்கியதால் மக்கள் நெஞ்சங்களில் குடியிருக்கிறார்கள். சரித்திரத்தில் இவர்கள் பெற்றுள்ள இடம் மகத்தானது. எழுபது ஆண்டுகள் நிறைந்துள்ள வள்ளல் நானறிந்தவரையில் ஒரு ராஜரிஷி.

வயிற்றுக்குச் சோறு வழங்கினால் ராஜா. உள்ளத்துக்கு இறையுணர்வை ஊட்டினால் ரிஷி... இரண்டையும் தந்தால் ராஜரிஷி...

'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்'

என்ற ஆண்டாளின் திருவாக்கினை எண்ணிப் பார்த்து வள்ளலை வழிபடுகிறேன். எனக்குப் பிறவியின் அர்த்தத்தை உணர்த்திய ஞான வள்ளலை வணங்கிப் போற்றுகிறேன்.

அருள்மாமணி அவர்கள் அளித்துவரும் ஊக்கத்தால் இன்று பேச்சு மேடைகளில் எனக்கு வரும் சிறப்புக்கள் அனைத்தையும் வள்ளல் அவர்களின் திருவடிகளுக்கு நன்றியுணர்வோடு காணிக்கையாக்குகிறேன். இந்தச்சிறப்பெல்லாம் அவர்கள் தந்தவை... தருபவை

இந்தப் பவள விழாவில் வள்ளல் அவர்களையும் அன்னை சீதையம்மாள் அவர்களையும் வணங்கி மகிழ்கிறேன். பல்லாண்டு பல நலம்பெற்று வாழ்கவென வாழ்த்துகிறேன். அன்னார் ஆசியை யாசிக்கிறேன்.



வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு

நல்ல எண்ணங்களான, பாவமற்ற எண்ணங்களை உடையவனாக வாழவேண்டும். நாமும் நலமுடன் இருக்க வேண்டும், மற்றவர்களும் நல்லபடியாக இருக்கவேண்டும் என எண்ணவேண்டும். நல்லவர்கள் மனம் நோக நாம் நடக்கக் கூடாது என்ற உறுதி வாழ்வு வாழ வேண்டும். இப்படி எண்ணங்களும், புண்ணியத்துக்குச் சமமான எண்ணங்கள். பணத்தைக் கொண்டு மட்டும்தான் புண்ணியம் செய்யமுடியும் என்பதல்ல.

— 'கற்குழி' —அருட்பெரும் வள்ளல்

வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு

# வள்ளற் பெருமகனை வாழ்த்தும் பெருமையிது!

டாக்டர் மு. தமிழ்க்குடிமகன், எம். ஏ., பிஎச். டி.,
முதல்வர், யாதவர் கல்லூரி, மதுரை.

பிறர்க்கு உதவுதல் என்பது உலகெலாம் நிலவி வரும் ஒரு பண்பாயிருப்பினும் தமிழ்நாட்டுக்கே அது சிறப்புப் பண்பு எனலாம். பண்ணன் வீட்டு வாயில் நோக்கி எறும்புகளைப் போல வரிசையில் ஊர்ந்து செல்வதாயினும் அரசர்களையும், குறுநில மன்னர்களையும அடுத்து நின்று வாழ்த்துப்பாடி வரிசை பெற்றுவரும் காட்சிகளாயினும் தமிழ்நாட்டின் ஒரு பண்பைப் படம் பிடிப்பதாகவே உள்ளன.

அதுதான் ஈகைப் பண்பின் ஏற்றம்,

பொருள் சேர்த்தால் மட்டும் போதாது; பொருளைப் பேணிக் காத்தல் என்பதும் சமுதாயப் பார்வையில் ஏற்றமாக அமையாது. அப்பொருள் எப்படிப் பயன்படுகிறது என்பதைப் பொறுத்தே அதன் ஏற்றம் அமைகிறது.

ஈத்துவக்கும் இன்பம் அறிந்தவர்கள்தாம் வாழ்விலும் சிறந்து நின்று, பலர் மனத்திலும் நிறைந்து நின்று வரலாற்றிலும் மிளிர்ந்து நிற்கிறார்கள்.

பினாங்கில் தொழில் செய்து பெரும் வெற்றிகண்டு திகழும் வள்ளல் ஆறுமுகம் பிள்ளை தமிழ்க்குடிக்குச் சொந்தக்காரர் என்பதில் எங்கட்குப் பெருமை. அதிலும் மலேசியா நாட்டின் தன்னேரில்லாத தமிழ்ப்பெருமகனாக விளங்குவது, வள்ளற் பெருமகனாய் வாழ்ந்து காட்டுவது எங்கள் நெஞ்சை இனிக்கச் செய்யும் செய்தியாகும்.

1977ஆம் ஆண்டில் நான் மலேயகம் சென்றிருந்தபோது அவர்களைக்கண்டு அளவி னேன். அவர்கள் விருந்தினனாக இருந்தேன். அவர்கள் தலைமையில் உரையாற்றினேன். தமிழ் இலக்கியத்தில் அவர்கட்குள்ள ஆர்வத்தைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தேன்.

உரையாடலின்போது அவர்களிடமிருந்து ஒரு புதுமைச் செய்தியைக் கண்டேன். ஆம்! திருமந்திரத்தின் மீது அவர்கட்குள்ள காதலைக் கண்டு வியந்தேன். சிறந்த வாழ்வியற் கோட்பாடுகளையும், அறிவியல் பார்வையோடு கூடிய அணுகுமுறைகளையும் மனித வாழ்வின் சரியான பொருளையும் தெளிவாக உணர்த்தும் சிறப்புக்கொண்டது திருமந்திரம்.

மனித உடல் பொய் என்று அனைவர்க்கும் தெரிந்தாலும் அதனைப் பொய் யாய்க் கருதிப் பேண மறந்தால் வாழ்வும் பொய்யாய்ப் பழங்கதையாய்ப்போய்விடும். எனவே ஒருவன் வரலாற்றைப் படைக்கிறான் என்று சொன்னால் அவன் உடலை

மெய்யாய்ப் பேணி மேல்நிலை எய்தினான் என்பதுதான் பொருள். பொய்யை மெய் யாய்க் கருதிப் போற்றுவதில்தான் எத்தனை உயர்வு! எத்தனைச் சிறப்பு!

இதைத் திருமூலர் மிகச் சிறப்பாகக் காட்டி விடுகிறார்;

'உடம்பார் அழியின் உயிரார் அழிவார்;
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்;
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே' என்கிறார்.

யார் உபாயம் அறிந்து வைத்திருக்கிறார்களோ, உத்தி தெரிந்து உடலைக் கையாளு கிறார்களோ அவர்கள்தான் உழைக்கவும். உயரவும் முடியும்.

வள்ளல் ஆறுமுகம் பிள்ளை ஓர் அரிய மனிதர். உடம்பை வளர்க்கும் உபாயம் மட்டுமன்றி, உயர்வதன் நுட்பமும், அந்த உயர்வும் தன்னை ஒப்பாரும் மிக்காரு மில்லாத, ஈடும் இணையும் இல்லாத பேருயர்வாக அமையும்படியான நுட்பமும் கொண்ட சிறந்த மனிதர்.

1977ஆம் ஆண்டில் நான் அவர்களுடன் கலந்து பழகும்போது திருமந்தி ரத்தின் சிறப்பை உணர்த்தினார்கள், அதில் மேலும் மேலும் ஈடுபடும் ஆர்வத்தைக் காட்டினார்கள். திருமந்திரத்தின் சிறப்பை நானும் அறிவேன் எனினும் அவர்கள் அளவுக்கு எனக்கு அதில் போதுமான அறிவு உண்டு என்று சொல்லமாட்டேன். என்றாலும் அவர்களோடு கருத்துப் பரிமாறிக் கொள்ளும் அளவுக்கு வாய்ப்பிருந்தது.

'அடுத்த முறை வரும்போது தாங்கள் திருமந்திரத்தைப் பற்றிப் பேசவேண்டும்' என்றும் பேச்சு வாக்கில் போட்டு வைத்தார்கள். சரி என்று தலையாட்டிவிட்டு வந்தேன்.

நான்காண்டுகள் ஓடிவிட்டன. ஈப்போ பாவாணர் தமிழ் மன்றத்தின் அழைப் பின்பேரில் 1981ஆம் ஆண்டு இரண்டாவது முறையாக மலையகம் செல்ல நேர்ந்தது. பினாங்கு நகரில் வள்ளல் அவர்களைக் கண்டு பேசிக்கொண்டிருந்தேன். இம்முறை 6 நாட்கள் மட்டுமே பினாங்கில் தங்க நேர்ந்தது. எனினும் புக்கிட்மெர்தாசத்தில் கோவில் அரங்கில், உரையாற்ற வேண்டும் எனக்கூறினுர்கள். ஒத்துக்கொண்டேன். இரண்டு நாளில் அறிவிப்பதாகக் கூறினார்கள். அதன்படி இரண்டு நாட் கழித்து வந்த அழைப்பைப் பார்த்து வியந்து போனேன். அதிர்ந்தும் போனேன். ஆம்: எனக்கு வள்ளல் அவர்களே ஒரு தலைப்பைத் தந்திருந்தார்கள். அந்தத் தகைப்புத்தான் என்னை வியப்பிலாழ்த்தியது.

தலைப்பு : 'திருமந்திரத்தின் சிறப்பு' என்பதாகும். தலைப்பு எனக்குத் தந்த வியப்புக்கும் காரணம் இதுதான். நான்கு ஆண்டுகட்கு முன் பேச்சுவாக்கில், அடுத்து

வரும்போது திருமந்திரம் குறித்துப் பேசுங்கள்' என்று அவர்கள் குறிப்பிட்ட செய்தி நான்கு ஆண்டுகட்குப் பின்னும் அவர்கள் நினைவில் நிற்கிறது என்று சொன்னால் அவர்களது ஈடுபாட்டை வியப்பதா? நினைவாற்றலை வியப்பதா? என்னைச் செயற்பட வைக்கும் செயலாண்மையை வியப்பதா?

இன்றும் விழித்துக்கொண்டிருக்கிறேன்.

பண்டை நாளில் மூவேந்தர்களும் வள்ளல்களாக இருந்தார்கள் என்றாலும் காலப் போக்கில் மூவேந்தர்கள் தங்களைச் சார்ந்து நின்ற ஓதுவார்கட்கும், ஆரியப்பூசாரிகட்கும் உதவுவதில் முன்னின்றனர். அதனால் ஏழைத் தமிழ்ப்புலவர்கட்கு எட்டாக் கையராகவும் ஆயினர். இந்நிலையில் குறுநில மன்னர்கள், சிற்றரசர்கள் முதலியோர் தான் ஏழ்மை நிலையில் உள்ள எல்லாப் புலவர்களையும் ஏற்றுச் சிறப்பித்து வள்ளல்களாகப் பெயரெடுத்து வரலாற்றிலும் நிலைத்துள்ளனர்.

நம் வள்ளல் ஆறுமுகம் பிள்ளை அவர்களோ வேந்தர்கள் இல்லாத மக்களாட்சிக் காலத்தில் முடிசூடா மன்னராக, முன்னாள் வள்ளல்களின் புகழையும் சேர்த்துச் சிறப்பிப்பவராக, நினைவாற்றல் மிக்க ஏந்தலாக விளங்கி வருகிறார்கள்.

இது தமிழ்க்குடிக்குச் சிறப்பு; தமிழினத்துக்குப் பெருமை! வாழிய நீடூழி வள்ளற் பெருமகன்!



வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு

ஒவ்வொரு மனிதனும் தன் உள் மனத்தை உருக்குபவன் தானாகவே அமைகிறான். அவனை அறியாமல் அவனுடைய உள் மனதிலே எதுவும் சென்று பதிவதில்லை, தொடர்ந்து எப்போதும் அவன் நல்லவைகளையே நினைத்து, நல்ல காரியங்களையே செய்து வருவானானால், நல்லது செய்வதற்கான அவனுடைய மன நிலை மிகுந்த வலிமை பெறும்.

— சன்மார்க்கம்' - அருட்பெரும் வள்ளல்

வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு

## அருள் அரசி அன்னையாரின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா



அறுபதாம் வயது நிறைந்த சீதை அன்னை
அண்ணலுடன் மணமேடை அமர்ந்த காட்சி.



திருமண விழாவில் தெய்வ பூசனை.



பெற்றோருக்குப் பொன்னீராட்டி வாழ்த்துப்பெறும்
'இளையவரும்' இன்துணை நங்கையாரும்





தாய் தந்தையர்க்கு மண நீராட்டி வாழ்த்துப்பெறும்
'நகரத் தந்தை' யும் நற்றுணை நங்கையாரும்.





அன்பு மகள் நாச்சியாரும் அருமைக் கணவரும்
அருள்வள்ளல் தம்பதியரை மண நீராட்டும் காட்சி.



மணவிழா தொடர்பாக மறையவர் பலருக்கு
அரிசிக்கொடை வழங்கும் அருள்மாமணி.



சோழிய வேளாளர் சங்கத்தில் தொடக்கவுரையாற்றும் தொண்டுநெறிச் செல்வர்.



வேளாளர் சங்கப் பெருமக்களுடன் வள்ளல் பெருமகனார்.



மலேசிய நாட்டுப் பொதுப்பணி அமைச்சர்
மாண்புமிகு சாமிவேல் அவர்களுடன் மணிவள்ளல்



இலங்கைத் தமிழரின் இனிய தலைவர் அமிர்தலிங்கம் அவர்களுடன்
அருந்தவச் செல்வரும் அருமைப் புதல்வரும்



அருள்மாமணி ஆறுமுகம் பிள்ளை அளித்த அறுசுவை விருந்தில்
தமிழினத்தின் தன்னேரிலாத் தலைவர் அறிஞர் அண்ணுவும்,
தமிழக ஜனதா கட்சித் தலைவர் இரா. செழியன் அவர்களும்



தமிழவேள் திரு. பி. டி. ராஜன் அவர்களுடன
தமிழ்ச் சித்தர் அருள்மாமணி



1966-ல் அருள்மாமணி அளித்த விருந்தில் மலேசியத் தலைமை அமைச்சர் மாண்புமிகு துங்கு அப்துல் ரஹ்மான், மலேசியாவில் இந்திய ஹைகமிஷனர் திரு. M. K. கித்வாய், மற்றும் மலேசிய அமைச்சர்கள்.

# அருள்மாமணி வாழ்க!

கலைமாமணி — டாக்டர்
கவி கா. மு. ஷெரீப்
சென்னை

தேசுடைய திருப்பத்தூர் செழுநகரம் தன்னில்
திருவார்ந்த நாகராஜப் பிள்ளையரும் மைந்தர்
பாசமுடன் செந்தமிழைப் போற்றுகின்ற செம்மல்
பழகுவதில் எவரிடத்தும் பரிவுடைய அன்பர்
வீசுபுகழ் எண்டிசையும் கொண்டபெரும் வள்ளல்
வித்தகராம் ஆறுமுகம் பிள்ளையெனும் தாதா
ஆசையுடன் தேயத்தார் அருள்மாமணி யென்றே
அழைக்கும்பெயர் பெற்றயிவர் வாழ்க பல்லாண்டு!

கல்விதனை வளர்ப்பதிலே கருத்துடைய நல்லார்
கருணையுடன் வழங்குவதில் கர்ணனையும் வென்றோர்
செல்வம்தனைப் பயன்படுத்தும் செம்மைநெறி கண்டோர்
தேசத்தின் மேல்பற்று மிக்குடைய நேசர்
சொல்லரிய தெய்வத்தின் பாற்பற்று மிக்கார்
தூயதையே என்றைக்கும் நேசிக்கும் தூயர்
அல்லுபகல் என்னாளும் நல்லதையே செய்யும்
ஆறுமுக அருள்மாமணி வாழ்க பல்லாண்டு

சந்திரனும் நாணுமிவர் வெள்ளைமனம் கண்டு
தாமரையும் வெட்கிடுமே இவர்முகத்தைப் பார்த்தால்!
விந்தியமும் நாணுமிவர் புகழ்ப்பொலிவை நோக்கின்
விரிந்தயிவர் புலமையின்முன் நாணிடுவர் புலவர்
நந்தமிழைச் சொல்லுகின்ற நாட்டிலெல்லாம் வளர்க்கும்
நற்பணியில் குறுமுனியை விஞ்சிய விவேகி
சந்ததமும் நல்லவர்கள் மனம்வாழ்த்த வாழும்
தவமுடைய ஆறுமுக அருள்மாமணி வாழ்க!

மனைவிமக்கள் புடைசூழ எந்நாளும் வாழி!
வம்சமெனும் கொடிதழைக்க வாழியநீ வாழி!
தனிசிறக்க இன்னும்ஒரு நூறுண்டு வாழி!
நலமுடனே ஆரோக்கிய வாழ்வுபெற்று வாழி!
கனிவுதர எண்ணிய நல்லவை நடத்திக்
காலத்தை வென்றுலகில் களிப்புடனே வாழி!
இனிதான தமிழ்போல இறைவனரு ளாலே
ஏற்றமுடன் ஆறுமுக அருள்மாமணி வாழ்க!

# நல்லவழி வகுப்பார் நாளும் வாழ்க!

திருமதி. சௌந்தரா கைலாசம்
தேனாம்பேட்டை
சென்னை-18.

திரு. ஆறுமுகம் பிள்ளை அவர்களின் பவளவிழா நடைபெற இருப்பதை அறிந்து மகிழ்கிறேன். விழா சிறப்புற நடைபெற ஆண்டவன் அருள்புரிய வாழ்த்துகிறேன்.

சிவபெருமான் இளையமகன் திருப்பெயரை உடையார்;
சீதையம்மான் இதயமதில் ஒளியமுதாய் நிறைவார்;
அவனியெலாம் அருள்நெறியில் நிதம்பழக விழைவார்;
அன்புநதி பொங்கிவரப் பிறர்க்குதவி புரிவார்;
நவநிதியக் கொடைகொடுத்துக் கல்வியினை வளர்ப்பார்;
நாடுயர எப்பொழுதும் நல்லவழி வகுப்பார்;
பவளவிழாக் காணுகின்றார் ஆறுமுகம் பிள்ளை
பரமனவன் திருவருளால் வாழியபல் லாண்டே!

நாதன் தாள் வாழ்க!



---

வள்ளல் வாக்கு ❋ வள்ளல் வாக்கு ❋ வள்ளல் வாக்கு

---

ஜீவகாருண்யத்தினால் ஏற்படக் கூடிய லாபம் அன்பு. இந்த அன்பை ஒருவன் தன்னுள் வளர்க்க, உயர்ந்த பரிசுத்தமான எண்ணங்கள் அவனைச் சூழும். அந்த எண்ணங்கள் அவனை உயர்ந்த நல்லவனாக, பக்தனாக உயர்த்தும். அப்பொழுது இயற்கையின் தூய எண்ணக் காற்றுகளின் சுவாசத்தால், பஞ்ச சக்திகளின் அணு உணர்வு அவனுள்ளத்தில் புகுந்து ஆத்மீக உணர்வை உயர்த்துகிறது.

'சன்மார்க்கம்' - அருட்பெரும் வள்ளல்.

---

வள்ளல் வாக்கு ❋ வள்ளல் வாக்கு ❋ வள்ளல் வாக்கு

---

# நூறுயிரம் அறம் தழைக்க நோன்பெடுத்த அண்ணல்!

கலைமாமணி கவிஞர் மா. வரதராஜன்

---

ஆறுமுகம் பிள்ளையெனும் பெயரும் பெற்றீர்;
அருந்துணையாய் சீதையம்மாள் தன்னைப் பெற்றீர்!
ஏறுமுக மாயமைந்த இனிய வாழ்வின்
எழிற்பயனும் நன்மக்கட் செல்வம் பெற்றீர்!
பூரணத்வ வாழ்க்கையெனப் புகழும் வண்ணம்
பொற்புடைய பெயரன்மார் தம்மைப் பெற்றீர்!
பார்புகழப் பவளவிழாக் காணு கின்ற
பண்புடையீர்! பல்லாண்டுக் காலம் வாழ்க!

கலைநெஞ்சம் அருள்நெஞ்சம் கவிதை நெஞ்சம்
கவினுறவே பெற்றுள்ள கார ணத்தால்
கலைக்கூட மாகக்கல் லூரி கண்டீர்
கார்முகில்போல் வழங்குகின்ற தன்மை யாலே
தலைவள்ள லாய்இந்நாள் திகழுகின்றீர்!
தமிழ்வள்ள லாய்த்திகழும் தாங்கள் இன்று
பலர்வாழ்த்த பவளவிழாக் காணு கின்றீர்!
பல்லாண்டுக் காலம்நீர் வாழ்க! வாழ்க!

ஓராயி ரம்பிறைகள் கண்டு விட்ட
உத்தமரே! ஒப்பில்நற் குணத்தின் குன்றே!
சீராயி ரம்வாழ்வில் சேர்த்த செம்மால்!
சிந்தைதனில் தந்தையெனத் திகழும் அண்ணல்!
பாராயி ரம்காலம் வாழ்த்தும் வண்ணம்
பயனுறவே கல்லூரி போன்ற தான
நூறுயி ரம்அறங்கள் தழைக்கச் செய்ய
நோன்பெடுத்த பெரியவரே! வாழ்க! வாழ்க!

# பிள்ளைத்தமிழ் பாடப் பிறந்திருக்கும் மணிப்பிள்ளை

பேராசிரியர் டாக்டர் அர. சிங்காரவடிவேலன், எம்.ஏ., பி.டி., பி.எச்.டி., சி.ஜி.டி.

தமிழ்த்துறைத் தலைவர்

ஸ்ரீ சேவுகன் - அண்ணாமலை கல்லூரி

தேவகோட்டை

## பிள்ளைத் தமிழ்

அள்ளிக் கொடுக்கும் ஆறுமுக வள்ளலவர்
பிள்ளையென்றால் யாரும் பிழையென்று சொல்வாரோ?
பிள்ளையிலும் பிள்ளை பெரிய கைப்பிள்ளை
கல்லூரிப் பெயர் பார்த்தால் கைப்பிள்ளை நிலைபுரியும்.
'ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி'
கூறுகிறார் எல்லாரும்: கூறுவது சரிதானே
பன்னிரண்டு கைகளினால் வழங்குகிற பேரளவைத்
தன்னிரண்டு கைகளினால் தருமதுரை வழங்குவதால்
ஆறுமுகம் என்றபெயர் அவருக்கு மிகப்பொருத்தம்
ஏறுமுகம் கண்டுவரும் இனியமுகம் வாழியரோ!

மாணிக்கத் தூண்வரிசை வயிரமணித் தோரணங்கள்
ஆணிப்பொன் மஞ்சத்தில் அறிதுயிலும் பிள்ளைக்குக்
கால்தண்டை வெள்ளிவிழா; கைவளையல் தங்கவிழா
பால்வடியும் நெஞ்சுக்குப் பரிசளிப்பே பவளவிழா.
அகம்பார்த்து வருபவரை ஆறுமுகம் பிள்ளையது
முகம்பார்க்கும் கையசைக்கும்: முத்தங்கள் வாய்சொரியும்
முப்போதும் முற்றத்தில் முத்தமிழின் தாலாட்டில்
சப்பாணி கொட்டும் தலையசைத்து மகிழ்ந்திருக்கும்
ஆறுமுகப் பிள்ளை அருள்பாலைத் தினம்பருகி
ஆறுமுக வள்ளல்;பிறை ஆயிரமும் காணியரோ!

பந்தாட நந்தவனம் பழம்கொய்ய மலைத்தோட்டம்
அந்தரத்தின் அம்புலியை அழைக்கின்ற மாளிகைகள்
எழுந்துவரும் இமயமலை ஏறிவரும் கார்வரிசை
உழுந்துவரும் துவரைவரும் ஒருகோடி மாதம்வரும்
பிள்ளைக்குப் பிள்ளைகளும் பெயர்வளர்க்கும் கண் மணிகள்
பிள்ளைத் தமிழ்பாடப் பிறந்திருக்கும் மணிப்பிள்ளை
தலைவாழை இலைபோட்டுத் தமிழ்போல விருந்தளிக்கும்
கலைவாழ வந்திருக்கும் கர்ணன் அவதாரம்.
சிங்கார வடிவேலன் செந்தமிழால் வாழ்த்துகிறேன்
மங்கலங்கள் பொங்க மரபென்றும் வாழியரோ.

# பக்தி முகம்

பொற்கிழிக் கவிஞர் டாக்டர் ச. சவகர்லால்

அலைகடல் சேலை யணிந்துள பூமி
அணங்கொடு கோள்க ளெல்லாம்
நிலைகெடா வண்ணம் நேர்பட பக்தி
நித்தமும் விளங்கச் செய்யும்
தலைவனா மிறைவன் சாட்டையி லாடும்
தனிப்பெரும் பம்ப ரம்மாய்
உலகினி லாடும் உயிரின மென்பார்
உண்மையை உணர்ந்த வள்ளல்.

அவனியி லாடும் பம்பரந் தன்னை
ஆட்டுவோ னங்கி ருக்க
அவனவ னுயர்வு தாழ்வினை மனத்தில்
அரும்பிடச் செய்து வாழ்வில்
தவறெனும் மலையை நெஞ்சிலே நிறுத்தித்
தாங்கிடு மாற்ற மின்றிப்
பவந்தனைப் பெருக்கிப் பாழ்படா திறைவன்
பாதமே பற்று கென்பார்.

வாழ்வொரு கடலாம் சுறவினம் முதலை
வாய்பிளந் தங்கி ருக்கும்;
ஆழ்கடல் தன்னைக் கையினால் நீந்தி
அருங்கரை சேர எண்ணிப்
பாழ்பட லாமோ? குருவரு ளென்னும்
புணைதுணை வேண்டு மென்பார்
ஆழ்கட லென்ன? விண்ணையுங் கூட
அவனருள் கடக்கு மென்பார்.

கார்முகில் தவழ நீர்மணி சிந்தும்
கவினுறு கொடிமலை மேலே
பேர்பெறத் தனக்கோர் பெருமனை கொண்டு
பெருமையில் திளைத்திடும் வள்ளல்
சீர்பெறும் ஆறு முகத்தோடு திகழும்
செல்வனுக் கங்கொரு கோயில்
பார்புகழ் முறையிற் பாங்குடன் கண்டார்:
பக்தியிற் கனிந்துமே நின்றார்:

சீனரை மலேயா மக்களை மேலைத்
திசையினர் யாவ ரையும்
காணுறக் கூடிக் கைகளைக் கூப்பிக்
கந்தனை வணங்க வைத்தார்:

தோணுறு பக்திச் சூழலில் மூழ்கித்
திணர்நேர் செய்து நின்றார்:
வானுற [illegible] மந்திர முழங்க
விழாவினை எடுத்து நின்றார்:

ஆண்டவன் பேரை அகம்நிறுத் தாமல்
அணுவேனும் தொடுவ தில்லை:
பூண்டதோர் கடமை நெருக்கினு மேலோன்
பாதமே மறப்ப தில்லை;
ஆண்டவன் பேரில் எதுகேட் டாலும்
அளிப்பதிற் குறைவ தில்லை;
தாண்டவ மூர்த்தி வள்ளலை என்றும்
தகுமுறை காப்பா னாக!



வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு

தர்மம் செய்ய உணராதவர்கள், தன் உணர்வை, எண்ணங்களைத் தர்மத்தின் வழி செலுத்தாதவர்கள், ஆண்டவனை யும் ஆண்டவத் தன்மையையும், ஆண்டவ நியதிகளையும் உணரவும் நினைக்கவும் [illegible] தகுதிகளாக ஆக்கிக்கொள்கிறார்கள்.

— 'அறஞ்செயான் திறம்' - அருட்பெரும் வள்ளல்

வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு

# பெருங்கொடைகள் புரிந்த பெம்மான் வாழ்க!

வள்ளல் திரு. நா. ஆறுமுகம் பிள்ளை

மலேயா அரசின் தேச கௌரவப் பாதுகாப்புச் சபை உறுப்பினர்
(ஏ. எம். என்) விருது பெற்றதற்கு 1961 ஆம் ஆண்டு பாடிய

## பாராட்டுப் பாடல்

திருத்தளியார் அருள்பெருகு திருப்புத்தூர் நகரதனில்
திருமகளின் அருள்பெருகு திரு. ஆறு முகம்பிள்ளை.

மறிகடலைக் கடந்தினிய மலேயாநன் னாட்டினிலும்
அரசளித்த விருதுபெற்றார் அகமகிழ்ந்து வாழ்த்துவமே!

கல்விக்குக் கணக்கின்றிக் கனகமழை பொழிந்துயர்
பள்ளிக்குப் பெருங்கொடைகள் புரிந்தவரைப் புகழுவமே!

ஊருணிக்குக் கரையெடுத்தும், ஊருணியாய் உலகோர்க்கு
நீரளிக்கும் தகையுடைய நிறைகுணத்தார்ப் புகழுவமே!

காண்பதற்கும் இனியவராய்க் கருத்தினிக்கும் மொழியினராய்ப்
பூண்பதற்கும் வரலாற்றுப் பொலிவுடையார்ப் புகழுவமே!

தாய்த்தமிழர் திருநாட்டுத் தவமகனாய்த் திகழ்வதுடன்
காமருவு தருமலேயாக் கவின்முகிலைப் புகழுவமே!

ஏழைகட்குப் புரவலராய் எழில்தெய்வ அடியவராய்
வாழ்வளிக்கும் திறமுடைய வலியவரைப் புகழுவமே!

'செல்வத்துப் பயன்ஈதல்'' எனச்சொன்ன பெரும்புலவர்
நக்கீரர் வழிநிற்கும் நலமுடையார் நவிலுதுமே!

எனவாங்கு.

''நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்ப்
பண்புபா ராட்டும் உலகம்' என்ற
வள்ளுவர் வாக்கை எடுத்துக் காட்டி
வாழிய ஆறு முகனார் என்று
வாழ்த்துவம்; வண்மை என்றும் வாழவே!

வாசித்து அளித்தோர் : தலைமை ஆசிரியர், ஆசிரியர்கள்,
மாணவர்கள், நா. ம. கழக உயர்பள்ளி
திருப்புத்தூர்.

வரைந்தவர் : இரா. இராசகோபாலன்
தமிழாசிரியர், நா. ம. கழக உயர்பள்ளி
(தமிழ்ப் பேராசிரியர், ஆ. பி. சி. அ. கல்லூரி)

# ஆறுமுக வள்ளல் வாழ்க!

மக்கள் கவிஞர் அரு. நாகப்பன்.
செயலர், தமிழ் இலக்கிய மன்றம்
உ. சிறுவயல்

மலைநாட்டில் வளங்கூட்டும் தொழிலைக் கண்டார்
மனங்காட்டும் கருணையிலே எழிலைக் கொண்டார்;
கலைநாட்டும் படி,சமயக் கொள்கை உண்டார்
கவிநாட்டும் படிதொண்டில் செழித்து நின்றார்;
அலைகூட்டும் கடல்ஆழம் போல என்றும்
ஆறுமுக வள்ளலவர் உள்ளத் துள்ளே
நிலையான பாசமுடன், ஈகை, அன்பு
நெறியாகக் கொண்டுள்ளார்! வாழ்க! வாழ்க!

பொன்வளமே குறிக்கோளாய்க் கொண்டி டாமல்
புகழுரைக்குப் பணிகின்ற எண்ண மின்றித்
தன்னுளத்தின் உயர்வாலே கணக்கே யின்றித்
தருமங்கள் செய்கின்ற இதயம் நல்லார்!
புன்னகையாய்ப் பேசிடுவார்; முகத்தோ டுள்ளம்
பூத்திருக்கும் தாமரையாய்ப் பொலிந்தி ருக்கும்!
மன்னரெனக் கொலுவிருப்பார்; எந்த நாளும்
மனங்கலங்கா வலுவிருக்கும் வள்ளல் வாழ்க!

வந்தாரை வரவேற்றுத் தங்க வைத்து
வக்கணையாய் விருந்துகளும் பொங்க வைத்துச்
சிந்தையெலாம் மகிழ்வோங்க உரைக ளாடிச்
சிரித்தபடி அறிவுரைகள் நிறையச் சொல்லிப்
பந்தபாசம் மிகுந்தவராய்ப் பரிவும் காட்டிப்
பயன்விளையும் பொருள்வளமும் வழங்கி வாழ்த்தும்
எந்தையவர் ஆறுமுக வள்ள லாரை
இதயத்தால் வணங்கிமிக வாழ்த்து கின்றேன்.

முத்தமிழை நன்குணர்ந்தார்; உழைப்பி னாலே
முன்னேற்றம் கண்டிருந்தார்; ஞானத் தாலே
சித்தரெனத் தோன்றுகின்றார்; மருத்து வத்துச்
சிறப்பெல்லாம் உணர்ந்துள்ளார்; கல்விக் கென்றும்
புத்துணர்ச்சி ஊட்டுகின்றார்; இளைஞர்க் கின்றும்
பொறுப்புணர்ச்சி கூட்டுகின்றார்; பல்து றைக்கும்
வித்தகராய் விளங்குகிற வள்ளல் ஐயா
வியன்நலத்தால் இன்னும்நூ றாண்டு வாழ்க!

# ஆறுமுகமான பொருள்

டாக்டர் சரசுவதி இராமநாதன், எம்.ஏ., பி.எச்டி.,
தமிழ்த்துறைத் தலைவர், சீ. ஆ. மகளிர் கல்லூரி, பள்ளத்தூர்.

திருமிகு ஊராம் திருப்புத்தூரில்
மறுவறு கல்வி வளர்த்திடும் ஒருமுகம்
திருமந் திரமுதல் தோத்திரம் சாத்திரம்
பொருளுணர்ந் தாய்ந்திடு புரைதீர் ஒருமுகம்
வந்தவர்க்கெல்லாம் வாரி வாரி
வழங்கிடு மகிழ்ச்சியில் திளைத்திடும் திருமுகம்
சிந்தையிற் கொண்டிடத் தேர்ந்தநற் செய்திகள்
சேர்ந்திடு தாளைச் சிறப்பிக்கும் சீர்முகம்
பாங்கார் தொழிலைப் பல்கதிர் விரிவுடன்
பகலவன் போல நடத்திடும் ஒருமுகம்
தேங்கமழ் கோதைச் சீதையாருடன்
தீந்தமிழ் இன்பம் தேர்ந்திடும் ஒருமுகம்
ஆக, " ஆறுமுகமான பொருள் " அருமைக்
குமரனைப் போல
என்றும் இவர் இளமையுடன் வாழ்க இனிது!



வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு

உணவு இல்லாத ஒருவனுக்கு எவ்வளவு நாள்தான் உணவு கொடுக்க முடியும்? அவன் உணவைத்தேடித் தன் காலில் நிற்கும் நிலையை அவனுக்கோ, அவனைப் போன்றவர்களுக்கோ அல்லது அந்தப் பசி நிலையை அடையாமல் இருப்பதற்கோ அறிவைப் புகட்ட வேண்டும்.

'சன்மார்க்கம்' —அருட்பெரும் வள்ளல்.

வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு ※ வள்ளல் வாக்கு

# அருள்மாமணித் தம்பதிகள் வாழிய நீடு!

டாக்டர் ஞா. சௌந்தரராஜ், M.A., B.Ed., D. Litt.
சென்னை

பணம் படைத்தோர் பலருண்டு, நாட்டினிலே ;
குணம் படைத்தோர் சிலரே, உலகினிலே!
பணமும் குணமும் ஒன்றாகி, நன்மைசெயும்
மனம் படைத்தோர் யாருண்டு இவர்போல?

பண்டைத் தமிழ்மன்னர் கொடைவள்ளல் என்றுநாம்
பண்டை ஏடுகளின் வாயிலாய் அறிகின்றோம்;
இன்றைய வள்ளலிவர் வாரிவாரி இறைப்பதையோ
கண்ணாரக் காண்கிறோம்; மனதார வாழ்த்துவோம்.

எந்நாடு சென்றாலும் இந்நாடு என்நாடு
என்றேதன் தமிழ்த்தாயின் ஆசிபெற இக்கோமான்,
என்றுமே தமிழ்வாழ இன்றுமே பல்பணிகள்
மென்மேலும் புரிகின்ற விண்போற்றும் வித்தகரே!

அருள்மாமணித் தம்பதிகள் பெயர்பெற்று அமைந்திட்ட,
திருச்செல்வி சரஸ்வதியின் அருள்பெற்று நிலையுற்ற
திருப்பத்தூர் உயர்கல்விக் கலைக்கோயிற் பெருமையை
ஒருவாயாற் சொல்லவில்லை, ஊரேதான் சொல்கிறது!

சிவனும் சக்தியும் அர்த்தனாரியாய் வாழ்தல்போல்,
பவளமும் முத்துமே பதித்ததோர் ஆபரணமாய்,
இவரிருவர் வாழ்க்கையும் "வான்-நில"வாய் ஒளிவீசி
எவர்மனமும் அன்பினால் ஆட்கொண்டு கவர்ந்ததம்மா!

"ஆறுமுகம்" "சீதை"யம்மை அருமையாய் அமைந்தபெயர்!
ஆறுமுகக் கடவுளுமே பெருமையாய் வாழ்த்திடுவர்!
பரமனே ஆசிகூறி, பார்புகழ இவர்வாழ,
நாநாமும் வாழ்த்திடுவோம். இன்றுபோல் என்றும்வாழ!





தாயகம் திரும்பும் அன்புத் தந்தையாருடன்
ஒருயிர் ஈருடல் உத்தம மைந்தர்கள்.




மாளிகை வரும் வள்ளலார்க்கு
மாநகர்மக்கள் வைத்த வரவேற்பு




விழாக்காணும் நாயகரை வரவேற்கத்
திரளாகக் கூடியுள்ள கல்லூரி மாணவர்கள்.



உயர்கல்விக் கோயில் கண்ட உத்தமரை வரவேற்க
ஒருங்கு திரண்டிருக்கும் கல்லூரி மாணவியர்.



சிங்கநடை கொண்ட செந்நெறிச் செம்மலை
எதிர்கொண்டு வரவேற்க இளம் யானை காத்திருக்கும்.



விடு திரும்பும் வள்ளலுக்கு
வீடுதோறும் ஆரத்தி விழா.



வள்ளல் பெருமகனாரை வரவேற்க
மக்கள் வெள்ளம் பொழிந்த மலர்மாரி.



வள்ளல் வருகைக்குக் கட்டியம் கூறும்
வரவேற்பு வளைவுகளின் வரிசை காணீர்!



கல்லூரி கண்ட கலைவள்ளல் முகம் காணக்
காத்திருக்கும் உயர்பள்ளி மாணவர்கள்.

# விடிவெள்ளி சிறந்து வாழ்க!

டாக்டர் எஸ். பாஸ்கரன்
சென்னை

திருப்புத்தூர் பிறந்திட்ட விடிவெள்ளி
தினமிங்கே தருதன்றோ கொடையள்ளி ?
விருப்பத்தில் படிக்கின்றார் கல்லூரி
வித்தகராம் ஆறுமுகம் பேர்சொல்லி.
மறுப்பைத்தான் சொல்லாத பணக்காரர்
மனதாலே தருகின்ற சிங்காரர்.
சிறப்பைத்தான் பிறப்பென்னும் கொடையாளி
சிங்கப்பூர்ச் சீமைக்கும் பங்காளி.
புறப்பட்டார் அந்நாளில் வெறுங்கையாய்.
பொருள்சேர்த்தார் வேகத்தில் வேங்கையாய்.
வரப்பெற்றார் சம்பத்து பலகோடி.
வள்ளலெனும் பெயரன்றோ உயிர்நாடி ?
திருப்புத்தூர்க் கல்லூரி தனைத்தேடி
திரள்கிறது கூட்டம்இவர் புகழ்பாடி.
குறைப்பட்டார் குடும்பத்தின் ஒளிக்கற்றை !
கும்பிடுவேன் இவர்கொண்ட மொழிப்பற்றை.
தயவென்று வந்தவர்க்குத் தாராளம்.
தமிழுக்குச் செய்தவைகள் ஏராளம்.
சுயமென்று கொண்டிருக்கும் தன்மானம்
துளிகுறைக்க முடியாது யாராலும்,
நயமென்று சீதையம்மாள் அடிதொடர
நாகராஜன் தங்கவேலு கொடைதொடர
வயதின்று முடிகிறது எழுபத்து.
வரவேண்டும் இதுபோல பலபத்து !



# ஆறுமுகம் பிள்ளை என்ற ஒளி விளக்கு

டாக்டர் S. ஜீவராஜன், B.Sc., M.B.B.S.,

1968 முதல் 1971-வரை, நான் அருள்மாமணி நிறுவிய கல்லூரியில் B. Sc., படித்தேன். கல்லூரியில் படித்த அந்த மூன்று ஆண்டுகளும் என் உள்ளத்தில் என்றும் பசுமையாக இருக்கின்றன. வள்ளல் அருள்மாமணியின் ஆசீர்வாதத்தால், அன்னாரது உலகப் புகழ் பெற்ற மைந்தர் திரு. நா. ஆறு. நாகராஜனார் அவர்களின் கருணையுடன் மூன்று ஆண்டுகளும் எனக்கு இலவசமாகச் சாப்பாடு போட்டுப் படிக்கவைத்தார்கள்.

அன்னாரின் அருள் பெற்று இன்று நான் மிக மிக நல்ல வாழ்க்கை வாழும் நிலைக்கு, என்றும் அவர் நீடுழி வாழவேண்டும் என்று கடவுளை பிரார்த்திக்கிறேன்.

கல்லூரி கண்ட கலை வள்ளல் அவர்களின் கல்லூரியில் இடம் கிடைத்ததும், 3 ஆண்டுகள் அவர்கள் என்னைப் படிக்க வைத்ததும் ஒரு சுவையான கதையன்றோ?

அக் கல்லூரியில் 1968ம் ஆண்டு சேரவிண்ணப்பித்து கல்லூரி முதல்வரை அடிக் கடி சந்தித்து அட்மிஷன் கேட்டபோது, அவர்கள் எனது விண்ணப்பத்தைப் பரி சோதித்து முறைப்படி ஆர்டர் வீட்டுக்கு வரும். நீ போய்வா என்றனர். நானோ, விடாப்பிடியாக ஒருநாளைக்கு 50 தடவையாக அவர்களைச் சந்தித்து ஆர்டரைக்கேட் டேன். அவர்கள் அளித்த பதில் ஒன்றுதான் - '' போய்வா. ஆர்டர் வீட்டுக்குவரும்'' என்பது.

2 நாட்களும் தங்கி இருந்து அவர்களிடம் மன்றாடினேன். அந்த என் நிலையைப் பார்த்த சில ஆசிரியப் பெருமக்கள் என்னை அருள்மாமணியின் அருந்தவப்புதல்வர் திரு. நா. ஆறு. நாகராசனாரிடம் அழைத்துச் சென்றனர். அவரிடம் நான் எனது லட்சிய வாழ்க்கையைச் சொன்னேன். நான் ஆசிரியர் வேலைக்குப் படித்து முடித்த பின் 5 ஆண்டுகள் வேலை பார்த்தபின் டாக்டர் வேலைக்குப் படிக்க நினைத்து PUC படித்துப் பின் MBBS முயற்சியில் தோல்வியுற்று, BSc படிக்க வந்துள்ளது பற்றிச் சொன்னேன்.

எப்படியும் BSc படித்தவுடன் MBBS படிக்க வேண்டும் என்ற என் அழுத்தமான முடிவைக் கூறினேன். அருள்மாமணியின் செல்வம் அல்லவா ! ஒரே பார்வையில் என்னை அளந்து முடித்து விட்டு ''போ ... உனக்கு இன்று கல்லூரியில் இடம் மட்டும் அல்ல, 3 ஆண்டுகளும் எங்கள் பொறுப்பில்தான் படிக்கப் போகிறாய் ! படித்து முன்னுக்கு வா'' என்று கருணை மழை பொழிந்து, வாழ்த்துக் கூறிப் படிக்க அழைத்துச் சென்றார்கள்.

அவர்கள் கொடுத்த பிச்சைதான் இந்த B Sc பட்டமும், பின் அதனால் வந்த MBBS பட்டமும். 3 ஆண்டுகளும் என் வாழ்நாளில் அன்னாரின் அருள் பெற்ற மகத்தான ஆண்டுகள்.

அருள்மாமணி மலேசிய நாட்டில் இருந்து வரும்போது எல்லாம் அன்னாரின் புதல்வர் திரு. நாகராஜனார் என்னை வீட்டிற்கு வரவழைப்பார். அருள்மாமணியிடம் ஆசீர் வாதம் பெற வைப்பார்.

ஒரு தடவை அன்னாரைச் சந்திக்கச் சென்றேன் மாலையுடன்.

அருள்மாமணியின் அருகே அவர் வழிபடும் சாமியார் அவர்கள் இருந்தார். நான் அவருக்கு மாலைபோட அவர் அருகே சென்றபோது, அவர் தடுத்து, "அதோ அந்தச் சாமியாருக்கு உன் மாலையைப்போடு. அவர் நான் வணங்கும் தெய்வம். அவரிடம் ஆசீர்வாதம் பெற்றால் உன் குலம் தழைக்கும்" என்றார். நான் அந்த சாமியாரிடம் சென்று மாலையை அணிவித்தேன். அப்போது அருள்மாமணி அந்த அருள்மாமுனியிடம் சொன்னார் :

"நம் கல்லூரியில், நம் பொறுப்பில் இந்தப் பையன் படிக்கிறான், மிகவும் நல்ல பையன். முன்னேற வேண்டும் என்ற தவிப்பில் நிற்பவன். இதற்கு முன்பு ஆசிரியர் பணி புரிந்து இருக்கிறான். டாக்டர் படிப்புப் படிக்க நினைத்து இடம்கிடைக்காமல் இப்போது நம் கல்லூரியில் B. Sc., படிக்கிறான். தானும் நன்கு படித்துக் கொண்டு மற்றவர்களையும் படிக்கவைத்து வேலை நிறுத்தம் ஏதும் வராமல் பார்த்துக் கொண்டு மாணவர்கள், ஆசிரியர்கள் இருவருக்கும் ஒரு பாலமாக இருந்து, வாழ்ந்து வருகின்றான். இவனை ஆசீர்வாதம் செய்யுங்கள்" என்றார். அந்த மாமுனிவரும் ஆசீர்வாதம் செய்தார். பின் அருள்மாமணியும் எனக்கு விபூதி பூசி அருள்பாலித்தார். ஆக இருவருடைய ஆசீர்வாதத்தையும் பெற்று அன்று சிறப்படைந்தேன்.

இன்று அந்தச் சிறப்பு எனக்கு வளமான வாழ்க்கையைக் கொடுத்துக் காத்து வருகின்றது. அன்னாரின் பவளவிழா நடைபெறும் இந்நாளில் அந்த வள்ளல் அருள் மாமணியும் அவரின் தாயகுலமணி திருமதி சீதையம்மாளும் அவர்தம் செல்வங்களும் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு நீடூழி வாழ்க வாழ்க என்று கூறி, இறைவனை அனுதினமும் பிரார்த்திக்கிறேன். அன்னாரின் அன்பும், ஆசீர்வாதமும் கிடைக்க உதவிய எல்லா ஆசிரியப் பெருமக்களுக்கும் என் நன்றியை இதன்மூலம் தெரிவித்துக்கொள்கிறேன்.

"Our duty to others means helping others; doing good to the world" என்று சுவாமி விவேகானந்தர் சொல்லியது போல் வாழ்ந்துவரும் அன்னாரின் புகழ் உலகமெங்கும் பரவ, என் போன்று அவர் மூலம் வாழ்வு பெற்றவர்களின் எண்ணம் நிறைவேற இந்த பவளவிழா வழி வகுக்குமாக.



# அண்ணலும் அன்னையும்

பேராசிரியை திருமதி சந்திரா தங்கவேலு
ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி

வரையாத வான்மழையோ
வள்ளல் கொடைக்கரங்கள் ?

கரையாத மாமலையோ
கர்ணனிவர் நெஞ்சுறுதி ?

நீறணிந்த நெற்றியிலே
நிலைப்பதுவோ மெய்ஞ்ஞானம்.

மெய்ஞ்ஞானத் தீயினிலே
மாய்வதுவோ பொய்ப்பேதம்.

கருணை மழைபொழியும்
கார்முகிலோ கண்ணிரண்டும் ?

இனிமைமிகு சொல்விளையும்
இடமோ இதழிரண்டும்.

அம்மைக்குப் பாதியுடல்
அளந்து கொடுத்துவிட்ட

அப்பன் உறைந்திருக்கும்
ஆலயமோ நல்லிதயம் ?

அன்னக் கொடியேற்றி
அடியார்க்கு அமுதூட்டும்

அள்ளக் குறையாத
அட்சயமோ பெருஞ்செல்வம் ?

கடல்மலைகள் கடந்து
கனத்த பொருளீட்டிக்

கல்விப் பணிக்களிக்கும்
கற்பகமோ பிள்ளையிவர் ?

குடும்ப விளக்குதரும்
குளிர்நிலவுத் தங்கமென

அண்ணல் அடியொற்றும்
அன்னையோ நம்சீதையம்மாள் ?

ஆறுமுக வள்ளல்
அடைந்திருக்கும் மெய்க்கீர்த்தி

ஏழுலகும் சென்று
இயம்பிடுமே அவர் புகழை !

# எந்தன் இதய தெய்வமே!

பெ. சிங்காரம், M.A., M. Ed.,
துணைத்தலைவர், பழைய மாணவர் சங்கம்
திருப்புத்தூர் ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி

அன்பின் உறைவிடமாய் அடக்கத்தின் விளைநிலமாய்
பண்பின் நிலைக்களனாய் பாசத்தின் பிறப்பிடமாய்
அருளின் முழுவடிவாய் அகத்தின் தூய்மையதாய்
அறநெறியின் மறுபிறப்பாய் அவனியிலே உதித்தவரே!

ஆறுதலை வழங்குவது ஆறுதலை முருகன்
அவன் பெயரைப் பெற்றவரே அன்புடையீரே!
மாறுதலை — சமுதாய — மாறுதலை — வழங்குவது
கலைக் கல்லூரிஎனக் கல்லூரி தந்தவரே!

திரைகடலோடி — திரவியம் தேடி — அவற்றைத்
தீந்தமிழ் நாட்டிற்குத் தந்த தியாகச்சுடரே!
அலைகடல்வற்றும் வரை உந்தன் புகழ்
அவனியில் அழியாது நிற்கட்டும் — சிறக்கட்டும்!

ஏழை படிப்பதற்கு ஏற்பட்ட கல்லூரி
ஏழை எனக் கெனவே அமைந்ததுவோ?
இருட்டில் இருந்த என் வாழ்வு
கல்வி விளக்கால் களிநடம் புரிந்ததுவே!

தெய்வங்கள் பலஉண்டுஎன்பர்; உலகினிலே
கேட்டவரும் பார்த்தவரும் உண்டோ? புவியினிலே
பார்த்தேன் நான் உன்உருவில் — நீயே
எந்தன் இதயத்தில் இடம் பெற்ற தெய்வம்,

குடும்ப விளக்காய்க் குணக்குன்றாய்த் திகழும்
சீர்புகழ் பெற்ற சீதை அம்மாளே!
கொண்டல்போல் அள்ளித்தரும் குணவதியே
குடும்பத்தில் நீங்கள் ஒரு பல்கலைக் கழகம்!

செல்வத்துக்குக்கல்வி சென்மப்பகை என்பார்கள் — ஆனால்
''செல்வம்'' என்பதற்கோ ''செம்மை'' என்று பொருள் கண்டீர்!
மக்கட்செல்வம் பெற்றீர்! மனநிறைவு பெறும்படியாய்
எக்காலமும் வாழ்ந்திடவே இறைவனைநான் வேண்டுகிறேன்!

பவள விழாக்காணும் பண்புடைய பெரியீரே! உங்கள்
கமலத்தாள் பணிந்து வேண்டுகிறேன் — ஆசிபெற!

# சமுதாய வள்ளல்

எஸ். செந்தில் நாயகம்
கணக்காளர், ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி

திருப்புத்தூர், வால்மீகி பிறந்த புண்ணிய பூமிதான் ; அப்புண்ணியத்தின் பயனாகவே நம் வள்ளல் இங்கு அவதரித்திருக்கிறார்.

கார்மேக வண்ணன் இராமபிரானும் சீதையும் திருக்குமாரர்கள் லவனும் குசனும் நடமாடிய திருமண் இதுதான். அப்புண்ணியத்தின் பயனாகவே, கார்மேகமாய் வழங்கும் வள்ளலும், சீதையம்மாளும் அவர்தம் இரு புதல்வர்களும் இங்கு அவதரித்திருக்கின்றார்கள்.

மறைவாகப் பழங்கதைகள் பேசி, மங்கிக்கிடந்த திருப்புத்தூரில், ஆறுமுகம் பிள்ளை அவதாரத்திற்குப் பின்புதான், முன்னேற்றத்தின் விடிகாலைப்பொழுது அரும்பத் தொடங்கியது,

வள்ளல் மேகத்தின் அருள்மழைத்துளிகள் திருப்புத்தூர் மண்ணுக்குள் ஊசி மருந்தாக இறங்கி வளமூட்டத் தொடங்கின.

பதினான்கு ஆண்டுக்குப் பிறகு கோடீசுவராக ஊர் திரும்பிய வள்ளலின் பார்வையில்-முதலில் எதிரே தூர்ந்து இடிந்து கிடந்த பூமாயி அம்மன் ஊருணிதான் பட்டது.

இனிமேல், நீர்நிறைந்த ஊருணிபோல், ஊருக்குப் பயன்படப் போகிறவர் வள்ளல் என்பதைக் குறிப்பாகத் தெரிவிப்பதுபோல், முதலில், அக்கோடீசுவரர், ஊருணியைச் சீர்படுத்தித் திருத்தியபிறகே, தனக்கு மாளிகையை அமைத்துக்கொண்டார்,

அடுத்தடுத்து, அவர்தம் கொடையாலே, ஊர் வளர்கிறது ; வளம்பெறுகிறது ; வசதி பெருகுகிறது ; கடைகள் மிகுகின்றன ; வணிகம் வளர்கிறது ; பொருளாதாரம் சிறக்கிறது ; மக்கள் உயர்கிறார்கள் ; வீடுகள் உயர்கின்றன ; வீதிகள் பெருகுகின்றன... இப்படி...இப்படி...

வரப்பு உயர நீர் உயரும் ; வள்ளல் உயர, ஊர் உயருகிறது......

உள்ளூர் உயர்நிலைப்பள்ளிக்குக் கட்டிடம் இல்லாத குறையைஅகற்றி,இரண்டடுக்கு மாளிகை கட்டித் தந்தார்......

வெளி நகரங்களுக்குச் சென்று படிக்கும் வசதியுள்ள பணக்காரருக்கே தனியுரிமையாக இருந்த கல்லூரிக் கல்வியை, ஏழைகளுக்கும் பொதுவுடைமையாக்கக் கல்லூரி எழுப்பினார்......

...ஏழை மக்களுக்கு எளிய செலவில் மருத்துவ வசதி கிடைப்பதற்கான அரசு மருத்துவமனை — எல்லோருக்கும் தூய்மையான தண்ணீர் வழங்குவதற்கான குடிநீர்த் திட்டம் — இளம் சிறார்களுக்கு மாண்டிஸோரிப் பள்ளி — பூமாயி அம்மன் திருப்பணி...

—என்று சமுதாயப் பணிகள் பலவற்றையும் தன் கொடையாலும் முயற்சியாலும் திருப்புத்தூரில் தோற்றுவிக்கிறார்......

சில ஆண்டுகளுக்கு முன்பு, தமிழகத்தில் பஞ்சமும் பற்றுக்குறையும் தலைதூக்கிய போது, அவற்றின் நிழல் திருப்புத்தூரில் விழுவதற்கு முன்பே — வீடுதோறும் நேரே சென்று குறைந்த விலையில் தினமும் அரிசி வழங்கிய வள்ளன்மையை வரலாறு வியப்புடன் கண்டு குறித்துக்கொண்டது. வேறு மாவட்டங்களில் அரிசி கொள்முதல் செய்து வந்து தன் சொந்தச் செலவில் ஜீப்பும் ஊழியர்களும் நியமனம் செய்து, குறைந்த விலையில் மக்களுக்கு அரிசி வழங்கினுர் வள்ளல்.

வள்ளலின் கொடைகளில் மிகச் சிறந்த கொடை, 1965-ம் ஆண்டு நிகழ்ந்தது. ''என் தொழிலில் எனக்கு வலது கையாக இருந்து உதவவேண்டிய மூத்த மகனை, பொதுமக்களே! உங்களுக்காக, உங்கள் பணிக்காக விட்டுக்கொடுக்கிறேன்'' என்று அறிவித்தார் வள்ளல்.

அதன்படி, திரு நாகராசன் அவர்கள், ''எங்க ஊர் ராஜா — சேர்மன் நாகராஜா'' என்று மக்களின் தலைவரானுர்.

தமிழகத்திலேயே மிக இளம் வயதிலே ஒன்றியத் தலைவரான சாதனை மட்டுமல்ல — தமிழகத்தின் மிகச் சிறந்த ஒன்றியம் என்ற பரிசையும் திருப்புத்தூருக்குப் பெற்றுத் தந்தார் 'சேர்மன்'

தனக்கென வாழாது சமுதாயத்துக்கே வாழும் கொடைவள்ளல், நீடூழி வாழ்ந்து பெயரும் புகழும் சிறக்க இறைவன் அருள்வானுகுக,



# மயிலே ஆடுக! குயிலே பாடுக!

பேராசிரியர் அ. சுப்பிரமணியன், எம்.ஏ.

வரலாற்றுத்துறை,

ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி

அழகான தோகை கொண்ட மயிலினங்களே
— வள்ளல்
ஆறுமுகன் புகழ்பாடி ஆடுங்களே!
குழைவான குரல்கொண்ட குயிலினங்களே
— எங்கள்
குபேரன் பேர்சொல்லிக் கூவுங்களே!
நிலையான செந்தமிழில் பாட்டெழுதி
— வள்ளல்
நீடூழி வாழ்கவென வாழ்த்துங்களே!

# சீரைப்பெருக்கும் திருவுடையார் வாழ்க!

மு. தமிழ்மணி
தேர்வுநிலைப் பதிவறை எழுத்தர்
ஆறுமுகம் பிள்ளை-சீதையம்மாள் கல்லூரி

தென்பாங்கு இசைத்து வண்டுகள்தாம்
தெய்வத் திருப்புகழ் இயம்புகிற
பொன்போல் கொன்றைப் பூப்பொலியும்
புனம்சூழ் திருப்புத் தூர்நகரில்
மன்போல் திகழும் அருளாளர்
மாமணி ஆறு முகம்பிள்ளை
நன்மா பவள விழாக்காணும்
நற்றவப் பாங்கை வாழ்த்துகிறோம்

ஏரை ஆளும் வேளாண்மை
எழில்சேர் சோழ மரபாளர்
சீரைப் பெருக்கும் திருவுடையார்
செந்தமிழ் நாட்டின் மணிபோல்வார்
தாரை மழைபோல் கொடைவல்லார்
தங்கத் திருமகள் துணைகொண்டார்
பாரோர் ஏத்தும் பவளவிழாப்
பாங்கைப் போற்றி வாழ்த்துகிறோம்

அருமை மக்கள் நலம்சேர்க்க
அன்புப் பேரர் பேத்தியரும்
திருமிகு சீதை யம்மையுடன்
தெய்வத் திருவருள் உடனிற்க
பெருமை யாவும் பொலிந்திங்குப்
சிறக்கும் வாழ்வில் பல்லாண்டு
மருவும் மலைபோல் புகழ்மாலை
மல்கப் போற்றி வாழ்த்துகிறோம்



# எளியோர் துயர் நீக்கும் ஏந்தலே வாழ்க!

K. சீனிவாசன் - சாந்தி, திருப்புத்தூர்

காரிருள் போக்கி நிற்கும் கதிரவனே! இவ்வுலக மக்களின் மனத்தைக் குளிர வைக்கும் வள்ளலே! கூரிய ஞானம் பெற்று உயிர்களை வாழ்த்திடும் குருபரரே! ஆறுமுக வள்ளலே!

மக்களின் தொண்டே மகேசனின் தொண்டென்ற தக்கதொரு மந்திரத்தைத் தரணி அறிந்திட ஏழை எளியவரின் துயர் போக்க ஏற்றமிகு கல்வியைத் தந்தீர்கள். கோழை மகளிர் தலை நிமிர்ந்து குன்றென நிமிர்ந்து நின்றிட வகை பல கண்டீர்கள்.

உங்கள் தெய்வப் பணிக்குச் சான்றாக — உங்கள் அன்புக்கும் பக்திக்கும் எடுத்துக்காட்டாகப் புதுப்பொலிவுடன் நம்மூர் அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோயில் காட்சி தருகிறது.

உங்கள் பணிகளைக்கண்டு பணிவுடன் உங்களை வணங்கி நிற்கிறோம். இப் பவளவிழா நாளில் உங்களை வாழ்த்த எங்கள் இருவருக்கும் வயதில்லை, தகுதியில்லை.

என்றாலும் நீங்கள் உயர்ந்தால் ஊர் உயரும் எனக்கருதி சின்னஞ்சிறு அரும்பு களாகிய நாங்கள் இருவரும் மாநிலத்தாயாகிய அருள்மிகு மதவாயியை வேண்டி வணங்கி நிற்கிறோம். பெண்ணின் நல்லாளொடு பெருந்தகையாகிய தாங்கள் நலமுடன் பல்லாண்டு வாழ்க!

# கோடியில் ஒரு கொடைஞர்

**அயிக்கண்**

என்னால் நம்ப இயலவில்லை ; வள்ளலுக்கு எழுபது வயதாகிவிட்டதா ?

இன்றும் அவர் விட்டு விழாக்களுக்கு வருபவர்களை வரவேற்கும்போது அன்பு பொங்கச் சிரித்த முகத்துடன் சிங்கத்தின் கம்பீரம் தோய்ந்த நடைபோட்டு வருகிறாரே, அவருக்கா வயது எழுபதாகி விட்டது ?

கரை கடக்கும் அலைகளின் சீற்றத்தைக் கண்டு அஞ்சக்கூடிய பிஞ்சு வயதிலேயே கடல் கடந்து உழைத்துப் பொருளீட்டிக் கோடீசுவராக ஊர் திரும்பியபோது இருந்த உறுதியும் தன்னம்பிக்கையும், இன்றும் அவர்முகத்திலே தவழ்கின்றனவே, அவருக்கா வயது எழுபதாகிவிட்டது ?

ஆம். அவருக்குவயது எழுபதாகிவிட்டதுதான்; என்றாலும் துடிப்பிலும் உணர்விலும் பழக்கத்திலும் அவர் இன்னும் இளைஞர்தான். சரியாகச் சொல்வதென்றால்-எழுபது வயது இளைஞர் அவர்.

அவர் பணக்காரராகப் பிறக்கவில்லை ; ஆனால் பிறவியிலேயே வள்ளலாகப் பிறந்திருந்தார்.

மற்ற வள்ளல்களெல்லாம், தாம் சம்பாதித்ததில் கொடுப்பவர்கள் ; இவர், கொடுப்பதற்காகவே சம்பாதிக்கிறவர்,

பிறருடைய கைகளெல்லாம் தாம் உண்ணவும், உள்ளதை மறைக்கவுமே பயன் படுகின்றன.

இவருடைய கைகள், பிறருக்கு ஊட்டவும், உள்ளதைக் கொடுக்கவும் பழகியவை.

வெளிநாடு சென்ற பிறரெல்லாம், தனக்காகவும் தன் குடும்பத்துக்காகவுமே சம்பாதித்தார்கள்.

இவர் தனக்கும், தன் குடும்பத்திற்கும் முன்பாக, தன் ஊரையும் மக்களையுமே நினைத்தார்.

பூமாயி அம்மன் கோயில் குளத்தைச் சீர்படுத்தி ஊராருக்குப் பயன்படும் வகையில் ஆக்கிய பிறகே, தன் மாளிகைக்கு அடிக்கல் பதித்தார்,

'வெளி மாவட்டங்களில் தொழில் தொடங்கி லாபம் சம்பாதியுங்கள்' என்று அரசினரே வற்புறுத்தியபோதும் அதை மறுத்து, 'எனக்கு லாபம் முக்கியமில்லை. என் ஊர்மக்களுக்குப் பயன்படுவதாயிருக்க வேண்டும்' என்று உறுதியாக இருந்து கல்லூரியை அமைத்தவர் அவர்.

தான் ஓர் ஆலை முதலாளியாக மாறவேண்டும் என்பது அவர் விருப்பம் இல்லை. தன் ஊர்மக்கள் பொருளாதாரத்தில் உயர வேண்டும் என்பதுதான் அவருடைய வாழ்க்கை லட்சியம்.

அவருடைய கொடைச் செயல்களைப் பட்டியலிட்டுக் கூற வேண்டியதில்லை. தமிழகத்தின் ஒரு திருப்புத்தூரை வடாற்காட்டுத் திருப்பத்தூர் என்று குறிப்பிடுவது போல், இந்தத் திருப்புத்தூரை 'ஆறுமுகம் பிள்ளை திருப்புத்தூர்' என்று தமிழக வரலாறு அடையாளம் காட்டுகிறது.

சிலர், நம் அருள்மாமணியைப் பழங்காலத்து வள்ளல்கள் பாரி, காரி, குமணன், கர்ணன் முதலியவர்களோடு ஒப்பிடுகிறார்கள். ஆனால் அவர்களெல்லாம், தம்மிடம் இருந்த பரம்பரைச் செல்வத்தைத் தான் கொடுத்தார்கள். இவரோ, ஏழையாகப் பிறந்ததிலிருந்தே கொடுக்கத் தொடங்கி,பிறகு கொடுப்பதற்காகவே பணக்காரரானவர்.

இவருடைய வள்ளல் தன்மைக்குக் கார்மேகத்தை ஒப்பிடலாமா?

கார்மேகம், கேட்கும்போது கொடுப்பதில்லை. கேட்காதபோது, வெள்ளமாய்ப் பொழிந்து அழிக்கும். தேவையான இடத்தில் பெய்யாமல், வீணாகக் கடலில் பெய்து அழியும்.

இவரோ, கேட்பவருக்கெல்லாம் கொடுப்பவர் : தேவையான சமயங்களிலும், தேவையான இடங்களிலும் கொடை மழை பொழிபவர். எனவே மேகமும் இவரிடம் தோற்றோடும்

இவரிடம் வள்ளன்மை மட்டுமா சிறந்து நிற்கிறது.? காகபுசுண்டர், திருமூலர் முதலிய சித்தர்களின் தத்துவங்களில் மூழ்கித்திளைத்த ஞானக்கடலாய் விளங்கி, உயிர்களிடத்துக் காட்டும் அன்பினால் தானே ஒரு தவச்சித்தராய்க் காட்சியளிக்கிறார்.

ஏறத்தாழ பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு......

பேராசிரியர் — பெரும்புலவர் பா. நமசிவாயம், பொற்கிழிக் கவிஞர் டாக்டர் ச. சவகர்லால் ஆகியோரும் நானும், வள்ளலின் விருந்ினராக மலேசியா சென்றிருந்த காலத்தின் நினைவுகள் என் நெஞ்சில் பசுமையாக மீண்டும் தளிர்க்கின்றன......

பினாங்கு நகரில் அவருடைய மாளிகையில் மாடியில் நாங்கள் தங்கியிருக்கிறோம். அன்று வள்ளலின் செயல் திறனுக்கு ஓர் எடுத்துக்காட்டாக, திருமுறை மாநாடு வண்ணக் கோலம் பூண்டிருக்கிறது.

மாநாடு தொடங்கி, நாங்களும் அந்நாட்டு அறிஞர் பெருமக்களும் கலந்து கொள்ளும் உரையரங்கம் நிகழ்கிறது. நண்பகலுக்கு முன்பாக, விழாவுக்கு வந்திருந்த ஆயிரக்கணக்கான மக்களுக்கு, அவர்களது இருக்கை தேடிச் சிற்றுண்டியும் காப்பியும் வருகின்றன. நாங்கள் வியந்துபோய் நிற்கிறோம். அது மட்டுமா? அனைவருக்கும் மதிய விருந்தும் மாலைச் சிற்றுண்டியும் வழங்குகிறார் வள்ளல். ஒரு மாநாட்டுக்கு வருபவர்களுக்கெல்லாம் உணவு வழங்கிய வள்ளன்மையை, அன்று வரலாறு வியப்புக் குறியோடு தன் ஏட்டில் பதிந்துகொள்கிறது.

விழா முடிந்ததும், நாங்கள் மாளிகை திரும்ப, காரில் ஏறுகிறோம். எங்கள் பேச்சிலும், நடத்தையிலும் மகிழ்ந்துபோன வள்ளல், ''நீங்கள் மிகவும் களைத்துப் போயிருக்கிறீர்கள். நீங்கள் நேரே கொடிமலைப் பங்களாவுக்கு செல்லுங்கள்'' என்று கூறுகிறார். (கொடிமலையின் மேலே இருக்கும் ஓர் அழகான விடுதி, வள்ளலுக்குச் சொந்தமானது.)

அவருடைய அன்பிலே மெய்சிலிர்த்துப்போன நாங்கள் ''ஐயா! மாளிகையில் எங்கள் அறைகளில் புத்தகங்கள் தாறுமாறுகக் கிடக்கின்றன...'' என்று தயங்குகிறோம்.

எங்கள் அறைகளைப் போய்ப் பார்த்தால், அவற்றின் அலங்கோல நிலை எந்தப் பொறுமைசாலியையும் சீற்றத்திற்குள்ளாக்கிவிடும் என்று எங்களுக்கு உறுதியான நம்பிக்கை இருந்தது

'பரவாயில்லை ... படித்தவர்கள் அறையில் புத்தகங்கள் அப்படித்தான் கிடக்கும்; அப்படித்தான் கிடக்கவேண்டும். நீங்கள் கொடிமலை செல்லுங்கள். அங்கு இரண்டு நாள் உங்களுக்கு ஓய்வு. உங்கள் உடையெல்லாம் அங்கு வரும்'' என்று சொல்லி, எங்களை அனுப்பி வைக்கிருர்

அன்றே, எங்கள் உடை மட்டுமல்ல, மற்ற அன்ருடத் தேவைப் பொருள்களையும் தவருமல் அனுப்பிவைக்கிருர். எங்கள் தந்தைகூட, இத்துணை பரிவோடு எங்கள் உழைப்பையும், களைப்பையும் புரிந்துகொண்டு, உளமகிழ்ந்து அன்பு செலுத்தியதாக எங்களுக்கு நினைவில்லை.

அதன்பின், மலேசிய-சிங்கப்பூர் நாடுகளில் நாங்கள் பல்வேறு ஊர்களுக்கும் சொற்பொழிவாற்றச் சென்றிருந்தபோது, ஒவ்வொரு நாள் இரவிலும், பத்துமணி அளவில் எங்களுக்கு போன்செய்து, ''சாப்பிட்டீர்களா? சாப்பாடு நன்ருக இருந்ததா? பால் குடித்தீர்களா?... தவருமல் பால் சாப்பிடவேண்டும்... இல்லையேல் தொண்டை புண்ணுய்விடும்'' என்று பரிவோடு கட்டளையிட்டு அறிவுரை கூறும்போது, நாங்கள் 'தாயினும் சாலப் பரிந்தூட்டும்' அவருடைய அன்பிலே நெகிழ்ந்து நெக்குருகி நிற்போம்.

இரவு பத்துமணி என்பது, அவருடைய வணிக நிறுவனத்தில் ஆயிரக்கணக்கான டாலர்களில் கணக்குப் பார்த்துக்கொண்டிருக்கும் பரபரப்பான நேரம். அந்நேரத்தில், எளிய எங்களை நினைவு கூர்ந்து போனில் பேசும் தாயன்பை நாங்கள் எங்கள் தாயிடமே தரிசித்ததில்லை.

அறிவுக் கடலாய் விளங்கும் அவருக்கு, எங்களுடைய பேச்சு எப்படித் தோன்றியிருக்கும் என்று நினைக்கும்போதே எங்களுக்குள் அச்சம் தலைதூக்கும்.

சுற்றுப்பயண முடிவிலே விடைபெறும் நாளன்று எங்களுக்கு அவர் நடத்திய விழாவிலே இதனைக் கூறி நன்றி தெரிவித்தோம்.

ஆன்மிகத்திலும் இலக்கியத்திலும் நிறைந்த அறிவும் அனுபவமும் உடைய வள்ளல் அவர்களுக்கு,எங்கள் பேச்சு எள்ளளவும் சிறப்பானதாகவோ,பயனுள்ளதாகவோ இருந்திருக்காது. ஆனுலும் எங்கள் பேச்சை அவர் எவ்வளவு ரசித்துக் கேட்டு மகிழ்ந்தார்?

வள்ளல் அதியமானிடம் ஔவை.

'யாழொடும் கொள்ளா, பொழுதொடும் புணரா
பொருளறிவாரா வாயினும் தந்தையர்க்கு
அருள் வந்தனவாற் புதல்வர் தம் மழலை
என்வாய்ச் சொல்லும் அன்ன...'

என்று கூறும் காட்சி நம் நினைவுக்கு வருகிறது.

சொல்லினிமை இல்லாமலும் காலப்பொருத்தம் இல்லாமலும் பொருளற்றவையாயும் இருப்பினும், தான்பெற்ற புதல்வரின் மழலை மொழியைக் கேட்டுத் தந்தை மகிழ்வதைப் போல், எங்களுடைய பேச்சுக்களையும் ரசித்துக் கேட்டார் வள்ளல்

இவ்வுலகில் ஆயிரத்தில் ஒருவர் செல்வந்தராயிருக்கக் காண்கிறோம். அவருள்ளும் லட்சத்தில் ஒருவரே வரையாது வழங்கும் வள்ளலாய்த் திகழ்கிறார்கள். வள்ளல்களிடையேயும் கோடியில் ஒருவரே ஈரநெஞ்சமுடைய தாயன்பினராய் விளங்குகிறார்கள். அத்தகைய வள்ளலாக நம் அருள்மாமணி இலங்குவது கண்டு நாம் பெருமையும் மகிழ்ச்சியும் அடைகிறோம்.

ஊரிலே மக்கள் துன்பத்துக்குள்ளாகும்போது வள்ளலுடைய மாளிகையைத்தான் கலங்கிய விழிகளுடன் நிமிர்ந்து பார்க்கிறார்கள்....

ஊரிலே புயலின் கொடுமை தலைவிரித்தாடும்போது, மக்கள் அவருடைய மாளிகையில்தான் தஞ்சம் அடைகிறார்கள்...

பஞ்சம் தன் கோரப்பற்களால் மக்களைத் தின்னத் தொடங்கும்போது, அவருடைய மாளிகையில் கஞ்சித் தொட்டிகள் அமுத சுரபியாய்ப் பொங்கிச்சுரக்கின்றன....

நாட்டிலே பற்றுக்குறை தன் வலிய கரங்களை நீட்டும்போது, அவற்றை முறித்து மிதித்துக்கொண்டு, மாளிகையிலிருந்து ஜீப்புகளும் தொண்டர்களும் புறப்பட்டு வீடுவீடாக அரிசியைக் குறைந்த விலைக்கு வழங்குகிறார்கள்.

சங்க காலத்துப் பசிப்பிணி மருத்துவனாகத் திகழ்ந்த வள்ளல் பண்ணன் வீட்டு முற்றத்தில், இரவலர்களின் வரிசை, எறும்புக் கூட்டமாய் மொய்த்து நெருங்குவதுபோல், வள்ளலின் மாளிகையை நோக்கி இரவலர் கூட்டம் நகர்ந்துகொண்டிருக்கிறது...

சோழன் கிள்ளிவளவன்,

"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய!" என்று பாடிப் பாராட்டினானே, அதுபோல நாமும் வள்ளலைப் பாடி வாழ்த்துகிறோம் —

'யாம் வாழும் நாளும் இவ் வள்ளல் வாழிய!"



வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு

எல்லாச் சமய யோக வழிகளும் ஆன்ம விடுதலையை நோக்கியே அழைத்துச் செல்கின்றன. சிவநெறியாகிய சன்மார்க்க நெறி என்பது எவ்வளவு உயர்ந்த நிலை என்பதும், எவ்வளவு பெரிய ஞானியாக இருந்தாலும் சன்மார்க்க நிலையைப் புரிந்தால்தான், அனுபவப்பட்டால்தான் நடராஜ நிலைபெற முடியும்.

'சன்மார்க்கம்' — அருட்பெரும் வள்ளல்

வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு  வள்ளல் வாக்கு



அருள்மாமணியின் அருட்கொடையால்
உருவான மருத்துவமனைக் கட்டிடம்.

பின்தங்கிய மாவட்ட இளைஞர்கள் பட்டப் படிப்புப்பெற
அன்பினால் வள்ளல் அமைத்திட்ட கலைக்கல்லூரி



வெளியூர் மாணவர்கள் விருப்பமுடன் தங்கிட
எழுந்துள்ள மூன்று விடுதிகளில் ஒன்று.



மழலைக் குழந்தைகளும் சிறுவர்களும் பயில்கின்ற
மாண்டிசோரி-மெட்ரிகுலேஷன் பள்ளிகளில் ஒரு பகுதி.



கல்லூரி ஆசிரியர் குடியிருப்பின் நடுவே
கலைவள்ளல் கட்டிய செல்வக் கணபதியின் திருக்கோயில்.



அருள்மாமணியின் மணிவிழா நினைவாக நகர்வாயில்களில்
அமைந்துள்ள வண்ண வளைவுகளில் ஒன்று.



மணிவிழா போற்றப் பேருந்து நிலையத்தில்
மக்கள் எழுப்பியுள்ள மணிக்கூண்டு.



அருள்தரு பூமாயி அம்மன் கோயில் தெப்பக்குளமும்
அருள்மாமணியின் வள்ளைமதிறை மாளிகையும்.



மலேசிய நாட்டுக் கோயில் ஒன்றில் மரியாதைப் பரிவட்டம் பெறும் மாமணி.



தவத்திரு திருச்சி சுவாமிகளை வரவேற்று மகிழும் திருப்புத்தூர் அருள்சித்தர்.




நாட்டுப் பணியாற்றும் கல்லூரிக் காளையர்க்கு
கைகொட்டிப் பாராட்டும் உயர்தனிப் பெருவள்ளல்.



ஆறுமுகம் பிள்ளை - சீதை அம்மாள் மாண்டிஸோரி-மெட்ரிகுலேஷன் பள்ளி விழாவுக்கு
வருகை தந்து சிறப்பிக்கிறார் வள்ளல் மாமணி.



ஆசிரியர் 'சாவி' அவர்களை அருள்வள்ளல்
பிருங்கு மாளிகையில் வரவேற்கும் காட்சி.



திருக்குறளார் முனுசாமி, மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. குருமூர்த்தி ஐ. ஏ. எஸ்.,
ஆகிய விருந்தினருடன் கல்லூரி விழாவில் கலைவள்ளல்.



கல்லூரிக் கல்வி இயக்குநர் டாக்டர் திருமதி. ஸ்டெல்லா சௌந்தரராஜ் அவர்களை 'அருளரசி' சீதையம்மாள் வரவேற்கும் காட்சி,



இளைஞர்க்குப் பயிற்சியும் எழுச்சியும் ஊட்ட
எழிலோடு அமைத்துள்ள டென்னிஸ் அரங்கம்.

